# கல்கி

## பொருளடக்கம்

விசுவாவசு ஐப்பசி 8 - அக்டோபர் 24

3 — தன்னிறைவு பெறுவதெப்படி?
5 — ராஜாஜியின் கருத்துக்கள்
7 — நம் கடன் பணிசெய்து ...
10 — வெற்றித் திருநகர்
23 — சேவைக்கு ஒரு சகோதரி
31 — கந்தன் கருணை
38 — அவன் எங்கே?
41 — அன்னை சுகர்னோ
45 — பல்கலைப் பக்கங்கள்
49 — சாதல் இல்லையேல் காதல்
56 — காலச் சக்கரம்
63 — ஜீவகீதம்
70 — தவம் எங்கே?
81 — சுவாமி கொடுத்த அணுகுண்டு
88 — வட்டமேஜை



இரண்டாம் உலகப் போரின் போது ஸ்டாலின்கிராடில் நாஜி படையெடுப்பை எதிர்த்து நின்ற ருஷ்ய வீரர்களில் ஒருவன் கூறியது :-

நகரம் களைத்து விட்டது.
வீடுகள் களைத்து விட்டன,
செங்கற்கள் களைத்துப் போய் விட்டன,
நாங்கள் களைப்படையவில்லை!





அமெரிக்கா
பிரிட்டன்
சுகர்னோ
சீன
PK



மலர் 25 ★ இதழ் 13

# தன்னிறைவு பெறுவதெப்படி?

முக்கியமாக உணவு தானியங்களுக்கும், பொதுவாக மற்ற எல்லாப் பண்டங்களுக்குமே இறக்குமதியை எதிர்பாராமல், நாமே இவற்றில் தன்னிறைவு பெற வேண்டுமெனப் பிரதமர் கூறியிருக்கிறார். மனித சக்தி, மூலதனம், இவற்றை இயற்கை நியதிக்கேற்ப முறைப்படி முழுமையாகச் செயல்பட அனுமதித்தால்தான் தேச உற்பத்தி பெருகும்; நாடு தன்னிறைவு பெறும்.

மனித சக்தி வீணாகாமல் முற்றிலும் பயன்படுத்தப் பெற வேண்டும். மின்சார சக்தியும், எண்ணெயின் எரிசக்தியும் சுலபத்தில் பயனுக்குக் கொண்டு வரப்படுவதால் மனித மனத்தில் ஒரு தவறான விளைவு நமக்கும் தெரியாமல் ஏற்பட்டிருக்கிறது. மனிதர்களுடைய தசையின் சக்தியையும், மனிதர்கள் இயக்கக் கூடிய விலங்குகளின் சக்தியையும் மறந்து வருகிறோம். மின்சார சக்திக்கான வசதி குறைந்து வரும்போதுகூட, உபயோகத்துக்கு வராமல் வீணாக அழிந்து வரும் மனித—மிருக சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறுகிறோம். இச் சக்திகளைப் பயன் செய்து கொள்ளும் விருப்பமே நமக்கு இல்லை. பிற சக்திகளை நம்பியிராமல் நம்மாலேயே எவ்வளவு செய்ய முடியும் என்பதை அறியும் திறனைக்கூட இழந்து விட்டோம். 'மின்சார சப்ளை வேண்டும்' என்று கூச்சலிடுகிறோம்.

சிக்கலான இயந்திரச் சாதனங்களுக்காகவே காத்திராமல், கைவசமுள்ள எல்லா சக்தி ஊற்றுக்களையும் உபயோகத்துக்குக் கொண்டு வருவதே தேச அபிவிருத்திக்கு அத்தியாவசியம். மனித சரீரம் என்பது மனித சேவைக்காக இயற்கை உற்பத்தி செய்த ஒரு தலை சிறந்த கருவி என்பதை நாம் நன்கு உணர வேண்டும். மிகவும் அற்புதமாக அமைக்கப்பட்ட இந்த மானுடக் கருவியைப் பயன்படுத்துவது கௌரவக் குறைவுஎன்றோ அந்தஸ்துக்குக் கீழ்ப்பட்டது என்றோ மயங்கலாகாது. முக்கியமாக, மற்ற சக்திகளில் போதாக்குறை ஏற்படும் போது மனித சக்தியைப் பயன்படுத்த வெட்கப்படவே கூடாது.

இயந்திரங்களைக் கொண்டு செய்யக் கூடிய சில காரியங்களில் மானுட சக்தியை ஈடுபடுத்துவதை மனித குலத்தின் நுண்ணிய ரஞ்சக உணர்வு எதிர்க்கக்கூடும். மனிதனைச் சுமை தாங்கி மிருகம் போல வேலை வாங்குவது வாஸ்தவமாகவே அநாகரிகம்தான். இக் கொடுமையை அகற்றியே ஆக வேண்டும். ஆனால் இவ்விஷயத்தை ஒரு தேசத்தின் வேலையின்மைப் பிரச்னையுடன் இணைத்துப் பார்த்தே படிப்படியாக முன்னேற வேண்டும். ஓரளவுக்கு நல்ல கூலி கிடைக்கிறது என்பதால் இந்திய மக்களில் பலர் பாரம் தூக்கியும், சுமை வண்டி இழுத்தும், மற்றும் இது போன்ற கடினமான வேலைகள் செய்தும் பிழைத்து வருகிறார்கள். இந்தக் கடும் உழைப்பைக் காண மனிதனின் நுண்ணுணர்வு வருத்தப்படுகிறது. அதோடு மேல்நாட்டு யாத்திரீகர்கள் இதுபோன்ற காட்சிகளைக் கண்டால் நம் தேசத்தைப் பற்றி இழிவாக நினைப்பார்கள் என்ற எண்ணமும் ஏற்படுகிறது. எனவே, மனிதர்களைக் கொண்டு பார வண்டி இழுப்பது போன்ற தொழில்களைச் சட்டப்படி தடுத்துவிட வேண்டும் என்று தோன்றுகிறது. ஆயினும், நம் நாட்டு வாழ்வின்



தமிழ்த்திரு நாடுதன்னைப்
பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

யதார்த்த நிலைமையை மூடி மறைத்துவிட்டுக் கற்பனையின் மீது மட்டும் நாம் வாழ முடியாது. இந்தக் கடுமையான வேலைகளைத் தடுப்பதால் எத்தனையோ மக்கள் ஜீவனோபாயத்தை இழந்து அவதிப்படுவார்கள் என்பதை நாம் மறப்பதற்கில்லை. அவர்களுக்கெல்லாம் மாற்றுத் தொழில் தருகிற அளவுக்கு மற்றத் துறைகளில் அபிவிருத்தி காண வேண்டும். வெளித் தோற்றத்துக்கு ஒரு நாகரிகமான சூழ்நிலையை உண்டாக்கிவிட்டுப் பல குடும்பங்களுக்குப் பெரும் இன்னலை விளைவிப்பது அறிவுடைமையாகாது. ஒரு வயதான ஸ்திரீ அல்லது நோயாளி தன் சௌகரியத்துக்காக ரிக்ஷா வைத்துக் கொள்வதையும், அதனால் ரிக்ஷாக்காரனின் வயிற்றுப் பிழைப்புக்கு வழி பிறப்பதையும் தவறு என்று சொல்லிவிடலாமா? யோசிக்க வேண்டிய விஷயம்தான் இது. ரிக்ஷாக்காரன் மனமொப்பி இழுத்துச் செல்கிறான்; அவனது சேவை தேவைப்படும் ஸ்திரீ மனமொப்பிக் கூலி தருகிறாள். ஜனத்தொகை மிகவும் நெரிசலாக உள்ள நாடுகளில், எல்லாத் தொழில்களையும் இயந்திரத்தின் மூலமே சாதித்துக் கொள்ள முடியாத நிலையில், மனிதனும் சில இனங்களில் மிருகங்களுக்குச் சரியாக உழைத்தாக வேண்டியுள்ளது. மனிதனும் மற்ற ஜீவராசிகளுக்குச் சமமாக உழைப்பதைப் பார்க்கும் போது ஜீவகாருண்யக் கொள்கையருக்குச் சிறிது திருப்திகூட உண்டாகும். மிருகங்கள் மனிதனின் காரியங்களுக்கு உதவ வேண்டுமானால் எவ்வளவு உணவு அவசியமோ அதை மட்டுமே அவற்றுக்கு அளித்து, அவற்றைக் காயடித்தும் கொடுமைப்படுத்தியும் வருகிறோம். விலங்கினங்களின் மீது இவ்வாறு ஆதிபத்தியம் புரிய மனிதன் எந்த உரிமையும் பெற்றிருக்கவில்லை. அவற்றின் துர்ப்பாக்கியங்களை மனிதனும் அவ்வப்போது பகிர்ந்து கொண்டு உழைப்பது ஒருவேளை இயற்கை நியதியின்படி நியாயமாகவும் இருக்கக் கூடும்.

உணவிலும், மற்றப் பொருட்களிலும் நாம் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்றும், இறக்குமதிகளை அதிகம் நம்பி யிருப்பது ஆபத்து என்றும் பிரதமர் கூறியிருப்பது ஏதோ புதிய கண்டுபிடிப்பு அல்ல. இந்தியாவும் பாகிஸ்தானும் போரிட்டுக் கொண்டதன் பின்பே புரிந்து கொள்ள வேண்டிய ஓர் 'உண்மை'யல்ல இது. என்றும் உள்நாட்டு உற்பத்தி பெருக வேண்டும் என்பதைப் பிரதமரும் மற்றக் காங்கிரஸ் பிரமுகர்கள் யாவரும் புரிந்து கொண்டு பிரசாரம் செய்வது மகிழ்ச்சிக்குரிய விஷயம். ஆயினும் ரேடியோ பிரசங்கத்தினால் மட்டும் உற்பத்தியைப் பெருக்கிவிட முடியாது. உள்நாட்டில் உற்பத்தி பெருகுவதற்குரிய நடவடிக்கைகளை எடுத்தாக வேண்டும். தொழிலபிவிருத்திக்குப் புது ஊக்கமளிக்காவிட்டாலும் ஊக்கத்தை அழிக்காமலாவது இருக்க வேண்டும். முதலீடு செய்வதற்குப் பொருளும், உழைப்பதற்கு மனிதர்களும், உற்பத்தியைத் திறம்பட நிர்வகிக்கும் மேற்பார்வையும்—இம் மூன்றுமே உற்பத்தி உயர்வுக்கு அவசியமாகும். முதலீடு பெருக வேண்டுமாயின் சேமிப்பதற்கு வசதி பெருக வேண்டும். லாப நோக்கம் ஈடேறினால்தான் முதலீட்டாளர்கள் சேமிக்க முடியும். மக்களின் சேமிப்பெல்லாம் சர்க்கார் கைக்குப் போய் விட்டால் மூலதனமும் பெருகாது; தொழிலாளர் நலனும் விருத்தியடையாது.

உற்பத்தியில் நம் தேசம் சுய தேவைப் பூர்த்தி பெற வேண்டும் என்று காங்கிரஸ் தலைவர்கள் சொல்வதில் புதிதாக எதுவும் இல்லை என்பது போலவே, நான் அதற்குக் கூறும் உபாயத்திலும் புதிதாக எதுவும் இல்லை. ஆனால் உண்மை என்பது புதிதாக இருக்க வேண்டும் என்கிற அவசியம் கிடையாது. பழைய உண்மைகளைப் புறக்கணித்து வரும் போது அவற்றை மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறுவதில் தவறில்லை. காந்திஜி கூறி வந்த பொருளாதார உண்மையை நாம் உணர்ந்து கடைப்பிடிப்பதற்குப் பெரும் தடையாயிருப்பது திட்டக் கமிஷனேயாகும். சர்க்கார் சர்வாதிபத்தியம் பெருகவும், வரிகள் உயரவுமே வழி வகுத்துப் பணத்தை விழுங்கி வருகிறது இந்த ஸ்தாபனம். உற்பத்தி உயர்வுக்கு உதவும் தனி மனிதனின் ஆதார வசதிகளை வற்றச் செய்து, சர்க்கார் மூலதனத்தைப் பெருக்கி வருகிற மடமையை எதிர்த்து நான் ஒருவன் கூவுவதால் என்ன பயன் உண்டாகும்? நாம் திவாலா நிலைமைக்கு எவ்வளவு அருகில் வந்து விட்டோம் என்பதை மக்கள் உணர்ந்தபாடாக இல்லை. பாகிஸ்தானுடன் நடத்திய சிறிய போர் இந்த ஆபத்திலிருந்து மக்கள் கவனத்தை வேறு திசைக்குத் திருப்பி விட்டது. யுத்த முயற்சி என்கிற உணர்ச்சித் துடிப்பு பொருளாதார பிரச்னையை மறக்கடிக்கும் மயக்க மருந்தாகி விட்டது.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)

## காரிகையின் கனவு

மத்தாப்பு வெளிச்சம், வாணங்களின் ஒளி, அதிர்வேட்டுக்களின் சத்தம் எல்லாமாகச் சேர்ந்து பொழுது விடிந்தால் தீபாவளித் திருநாள் என்பதைக் குதூகலமாக அறிவிக்கின்றன. இத் தருணத்தில் மணமான இளம் பெண்ணின் இதயத்தில் அன்புக் கணவனின் நினைவைத் தவிர வேறு எதை எதிர்பார்க்க முடியும்? அந்த நினைவின் மயக்கத்தில் சிறிது கண்ணயர்ந்து விடுகிறாள்; கண்ணயர்வில் கனவு ஏற்படுகிறது; கனவில் அவள் காதலன் வருகிறான்; அந்தக் கனவுத் தோற்றத்தை அவள் கைவிட விரும்பவில்லை; கனவு கலைந்தால் காதலன் மறைந்து விடுவான். கனவு கலையாமலே இருந்து விட்டால்....!

நனவென ஒன்றில்லை யாயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன்

என்ற வள்ளுவர் வாக்கை இங்கே நினைவுகூர வேண்டும். காரிகையின் இன்பக் கனவை எழில் ஓவியமாக இந்த இதழ் அட்டையில் வரைந்து காட்டியிருக்கிறார் ஓவியர் கல்பனா.

# ராஜாஜியின் கருத்துக்கள்



யாருடனும் கூட்டுச் சேராத நடஸ்தக் கொள்கையிலிருந்து இந்தியா மெல்ல விலகி ருஷியாவைப் பூரணமாக நம்பத் தொடங்கியிருக்கிறது; பாகிஸ்தானோ சீனத்துடன் சல்லாபித்து வருகிறது. இதன் நிகர விளைவாக இரு கம்யூனிஸ சாம்ராஜ்யங்களும் ஒன்று சேரக் கூடும்.

* * *

சர்க்காரின் திட்ட நிபுணர்கள் ஒரு மைய ஸ்தானத்திலிருந்து பிறப்பிக்கும் உத்தரவின் கீழ்தான் ஒரு தேசத்தின் உழைப்பு சரியாக அமையும் என்பது கம்யூனிஸ, சோஷலிஸ சித்தாந்தம். இரண்டு அடிப்படைக் கொள்கைகளின் மேல் இந்தச் சித்தாந்தம் அமைக்கப்பட்டிருக்கிறது: 1. சர்க்கார் செய்வது எப்போதுமே சரியாகத்தான் இருக்கும். 2. நாட்டில் அமைதி நிலவும் போதும் சரி, போர் நடக்கும் போதும் சரி, மக்களை வேர்வையும் கண்ணீரும் சிந்தி உழைக்கச் செய்து உற்பத்தியைப் பெருக்குவதற்குத் 'தேசப் பற்று' என்ற ஒரு நோக்கமே போதுமானது.

இவ்விரண்டு கொள்கைகளுமே தவறானவை என்று நிதரிசனமாகி வருகிறது. இந்தக் கொள்கைகளின் மேல் உற்பத்தியைப் பெருக்கும் உத்தி தோற்று விட்டது. உழைப்புக்கும் லாப நோக்கத்துக்கும்தான் நேரடித் தொடர்பு இருக்கிறது என்பதை ருஷியத் தலைமைப் பீடமான கிரெம்ளின் புரிந்து கொண்டு விட்டது. இதனையொட்டி ருஷிய சர்க்காரின் திட்டமுறை மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. என்றாலும், தனி மனிதர்களின் சுதந்திர முதலீட்டுக்கு இன்னமும் அங்கு இடம் அளிக்கப்படவில்லை. சர்க்கார் தொழிலை நிர்வகிக்கும் அதிகார வர்க்கத்தினரின் செயல் முறையில் லாபநோக்கத்தைப் புகுத்துவதோடு ருஷியா நிறுத்திக் கொண்டு விட்டது. எனவே, மேலே கூறிய இரு அடிப்படைக் கொள்கைகளை ருஷியா இன்னும் அடியோடு கைவிட வில்லை. எனினும், அது பிரச்னையில் புது நோக்குச் செலுத்தியிருப்பதன் தொடக்கத்தைக் காண்கிறோம். காரகோனைவச் சேர்ந்த பேராசிரியர் லிபர்மான் ருஷிய சிந்தனையைப் புது திசையில் திருப்பியுள்ளார்.

ருஷிய மக்களிடமும், உலகின் மற்றப் பகுதிகளில் வாழும் கபடம் தெரியாத மக்களிடமும் ஐம்பதாண்டுகளாகப் பரப்பப்பட்டு வந்துள்ள சோஷலிசக் கொள்கையும், மக்களை வருத்திச் சர்க்கார் லாபம் பெறுவதற்குப் பதில் மக்களே லாபம் பெற்றால்தான் உற்பத்தி உயரும் என்கிற கொள்கையும் ஒன்றுக்கொன்று பொருந்தாதவை. என்றாலும், இத்திசையில் எவ்வாறோ மறு சிந்தனை பிறந்திருக்கிறது. முதலில் சொன்ன இரு கொள்கைகளைச் சார்ந்து நிற்கும் வரை உழைப்பு ஒருகாலும் உயராது; என்றோ ஒரு நாள் இயற்கை தனது நியதியை நிலைநாட்டிக் கொண்டே தீரும்.

* * *

உள்நாட்டு விவகாரம், அந்நியப் பிரச்னை இரண்டிலுமே இந்திய சர்க்காரானது புத்திமதிகளுக்குச் செவிடாகி விட்டது. அதன் செவிட்டைக் குணப்படுத்த முடியும் என்றே தோன்றவில்லை. இதற்குக் காரணம் பிரதமரின் தவறல்ல என்றும், அவரை நெருக்கிப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கும் கட்சியின் தவறே என்றும் கருதுகிறேன். கட்சி நலன்களுக்கும் தேச நலன்களுக்கும் இடையே உள்ள வித்தியாசத்தை உணரக் காங்கிரஸால் இன்னமும் இயலவில்லை. ஜனநாயகச் சட்டசபை ஆட்சியில் இதுதான் பெரும் அபாயம்.

* * *

'இந்தியன் எக்ஸ்பிர'ஸில் சீனத்தைப் பற்றிப் பின்வருமாறு ஒரு செய்தி ஸ்தாபனத்தின் வாசகம் வெளியாகியுள்ளது: ''பீகிங்கிலிருந்து சமீப காலமாகப் பெருகி வரும் அரசாங்கப் பிரகடன வெள்ளத்தைப் பார்க்கும் போது, சீனம் உலக முழுவதையுமே எதிர்த்துப் போரிடுவதாகத் தோன்றுகிறது.'' இந்த அதிசாகஸமான உதாரணத்தை இந்தியா பின்பற்றாமல் இருக்கவேண்டும்.

* * *

ஸ்ரீ டி. வி. குண்டப்பா அவர்கள் பெங்களூரில் நிறுவியுள்ள கோகலே நிலையத்தின் இருபதாண்டு விழாவுக்கு மைசூர் மகாராஜா அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். ஸ்ரீ குண்டப்பா அவர்கள் ஓர் அசாதாரணமான வியக்தி. தாமாகவே தம்மை உருவாக்கிக் கொண்டவர். எந்தச் சர்வகலாசாலையின் உதவியும் பெறாமலே, தலைசிறந்த பட்டதாரிகளைக் காட்டிலும் மேம்பட்ட ஞானத்தைப் பெற்றவர். அரசியலிலும், சமூகத்திலும் பணி புரிவதற்கு விஷயஞானமுள்ள ஒரு குழுவை உருவாக்குவதில்

அயராமல் உழைத்து, தமது உழைப்புக்கேற்ற பலனைப் பெற்றவர். ஒத்துழையாமை இயக்கம் வெற்றி பெற்றபின், 'சிறை புகுவது மட்டும் அரசியல் ஆகாது. பிரச்னைகளை நன்ருகப் புரிந்து கொண்டு சிந்திப்பதும் சேர்ந்தாலே நல்ல அரசியல் நிலை ஏற்படும்' என்று மக்களுக்கு உணர்த்த வேண்டியிருந்தது. இந்த அம்சத்தில் ஸ்ரீ குண்டப்பா மகத்தான சேவை செய்திருக்கிறார். தமது நல்ல பணியை அவர் தொடர்ந்து செய்வதற்கு வசதியாக ஆண்டு விழாவின் போது பணமுடிப்பு அளிக்கப்படுவது திருப்திகரமான விஷயம்.

ஃஃஃ

நிருவாகத்தில் நடக்கும் அநீதிகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்குவதற்காக அதிகாரபூர்வமான ஒரு குழு அமைக்கப்பட வேண்டும் என்ற யோசனை உலக நாடுகளில் வலுப் பெற்று வருகிறது. ஸ்காண்டிநேவியாவில் உள்ள 'ஓம்பட்ஸ்மன்' என்ற நீதி ஸ்தல அமைப்பின் பாணியில் பிரிட்டனிலும் நிறுவ வேண்டும்; ஆயினும், இறுதி அதிகாரம் பார்லிமெண்டிடம் இருக்க வேண்டுமென பிரிட்டிஷ் சர்க்கார் முடிவு செய்திருக்கிறது. பிரான்ஸிலும் நிருவாக அநீதிகள் குறித்து விசாரணை செய்து தீர்ப்பு வழங்குவதற்கென ஓர் அதிகாரபூர்வமான தலைமைப் பீடம் இருக்கிறது. பொதுமக்களின் நம்பிக்கைக்கு உகந்ததாகவும்,சக்தியும் சுதந்திரமும் பொருந்தியதாகவும் உள்ள இத்தகைய ஓர் அமைப்பு இந்தியாவுக்கும் தேவைப்படுகிறது எனக் கருதுபவர்கள் பிரிட்டிஷ் பிரெஞ்சு முறைகளை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

ஃஃஃ

''உணவு தானிய வியாபாரத்தில் முன் யோசனையின்றிக் குறுக்கிடு செய்வது, மற்ற எந்தத் துறையில் செய்கிற தலையீட்டையும் விட அபாயகரமானது. உணவுப் பற்றுக்குறை ஏற்படுகிற சமயத்தில் அவசியம் இதில் பிரவேசித்தேயாக வேண்டும் எனச் சர்க்காருக்குத் தோன்றும். ஆனல் மிகவும் அத்தியாவசியம் என்று கருதப்படும் இச்சமயத்தில் செய்கிற குறுக்கீடுதான் மிகவும் பெரிய விபரீதத்தை விளைவிக்கும்.''—இவ்வாறு 1795ல் எட்மண்ட் பர்க் என்ற ஆங்கிலப் பேரறிஞர் எழுதினர். அதன்பின் 170 ஆண்டுகள் ஓடிவிட்டன. ஆனல் மனிதனின் இயற்கையும் உணவுப் பண்டங்களின் இயற்கையும் இந்த 170 ஆண்டுகளில் இம்மியும் மாறிவிடவில்லை. 1795ல் பர்க் கூறியது பிரிட்டனுக்கு எவ்வளவு அவசியமான உபதேசமாக இருந்ததோ அதே அளவுக்கு இன்றைய இந்தியாவுக்கும் தேவைப்படுகிறது.

ஃஃஃ

பாதுகாப்புக் கவுன்ஸில் ஏகமனதாக நிறைவேற்றிய போர்நிறுத்தத் தீர்மானத்தைப் பாகிஸ்தான் தொடர்ந்து மீறி வருவதை அனுமதிக்கலாகாது. பாகிஸ்தானின் போக்கு ஐ. நா. சபை வீரியமற்ற ஒரு ஸ்தாபனம் என்ற எண்ணத்தை உண்டாக்கும். எனவே, போர் நிறுத்தத் தீர்மானத்தை மீண்டும் வலியுறுத்த வேண்டும். இதை மீறினல் பாகிஸ்தானுக்கு உலக நாடுகளின் உதவியைத் தடுக்கும் விதத்தில் குறிப்பிட்ட சாஸன ஷரத்தின் கீழ் மேற்படி தீர்மானத்தை அமுலாக்க வேண்டும். சர்வதேச ஸ்தாபனம் ஒன்றுக்குப் பாகிஸ்தான் அடங்காமல் நடந்து வருவது அபத்தமாகும். பாகிஸ்தான் அத்துமீறி நடப்பது காரணமாக இந்தியாவும் தற்காப்புக்காகப் போரைத் தொடர்ந்து நடத்த நேரிட்டிருக்கிறது.

## தீப மங்கல ஜோதி நமோ நம

சகோதர நாட்டுடன் புரிந்த போரின் துயர நினைவுகளிடையே தீபாவளிப் பண்டிகை நிகழுகிறது. இன்ப துன்பங்களைக் கலந்து வைப்பது இறைவனின் லீலா விநோதம். ஆதியில், முதல் தீபாவளியும் ஒரு போரின் விளைவாகத்தான் பிறந்தது. நரகனின் மறைவுக்காகத் துன்புற்ற அதே தருணத்தில் அவனது அன்னை உலக இன்பத்துக்காகக் கண்ண பெருமானிடம் தீபாவளிப் பண்டிகையை ஒரு வரமாகக் கேட்டுப் பெற்ருள். சமீபத்திய போரில் உயிரிழந்தும், அங்கவினமுற்றும், மற்றும் பலவிதங்களில் இன்னலுற்றும் தேசத்துக்கு ஏற்பட்ட சோதனையைத் தீர்த்து வெற்றிச் சாதனை புரிந்த அனைவருக்கும் தீபாவளித் திருநாளில் அஞ்சலி செலுத்துகிறேம். நம் குடும்பத்தினராகவே அவர்களது குடும்பத்தினரையும் பாவித்து நம்மாலியன்ற தீபாவளிப் பரிசுகளை அவர்களுக்கு அளிப்போமாக !

தீப வரிசைகள் ஒளி வீசித் திகழும் திருநாள் தீபாவளி. தீபம் — தைலம்—திரி—ஜோதிக் கொழுந்து இவ்வளவும் சேர்ந்தாலே ஒளி கிடைக்கும். தேசத்தின் இயற்கை வளம் என்ற தீபத்தில், மூலதனம் என்ற தைலத்தை ஊற்றி, நிருவாகத் திறன் என்ற திரியை இட்டாலே அதன் மீது உழைப்பு என்ற சுடர்க் கொழுந்தை ஏற்ற முடியும் — உற்பத்தி என்ற ஒளியும் பெருகும். மூலதனத் தைலம் குறைந்தால் ஒளியும் மங்க வேண்டியதுதான். அது குறையாமல் பார்த்துக் கொள்வதே சர்க்காரின் கடமை. 'இந்த மேற்பார்வை போதாது, நாமே ஒளியை உற்பத்தி செய்வோம்' என்றெண்ணி அரசாங்கம் தானே பிரவேசித்தால் தைலத்துக்குப் பதில் தண்ணீரை ஊற்றிய கதையாகும்.

தீபம் தன்ருல் எரிகிறது. ஆனல் எந்நிலையிலும் அது தன்னையே தனித்துச் சார்ந்திருக்க முடியாது. புறச் சூழலும் அதைப் பாதிக்கத்தான் செய்கிறது. எதிர்காற்று அடித்தாலும் மழைத் தூற்றல் பட்டாலும் தீபம் அணைந்து விடும். புறச் சூழ்நிலை சாதகமாக இருந்தாலே தீபம் மங்காது ஒளி தரும்.

உள்நாட்டு வெளிநாட்டுப் பிரச்னைகளை விவேகத்துடன் தீர்த்துக் கொள்வதற்குத் தீபாவளி ஒரு பாடத்தைத் தன்னுள் பொதித்து கொண்டிருக்கிறது.

# "நம் கடன் பணிசெய்து கிடப்பதே!"

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

நம் கடன் பணி செய்து கிடப்பதே என்றார் அப்பர். இன்று நாம் செய்ய வேண்டிய இறை பணி நாட்டுப் பணி. நமது நாட்டின் முன்னணியில் நிற்கும் வீரர்கள் உடல், பொருள், ஆவிகளை யாருக்காக அர்ப்பணம் செய்கிறார்கள்? நாட்டுக்குள் உள்ள நாமெல்லோரும் அவரவர்களுடைய காரியங்களைச் சரிவர நடத்தவே எல்லையிலுள்ள வீரர்கள் அரண்களாக நிற்கின்றார்கள்.

அவர்கள் மாத்திரம் வீரர்கள், நாமெல்லோரும் சோம்பேறிகள் என்று இருக்கக் கூடாது. அவர்கள் எவ்வளவு தியாகம் செய்கிறார்களோ, அதற்குக் குறையாமல் பின்னணியில் நின்று நாம் தியாகம் செய்ய வேண்டும்.

நாம் எந்த விதத்தில் தியாகம் செய்யலாம்? நாட்டுக்குப் பொருள் குறைவு வராமல் முதலில் தியாகம் செய்யலாம். எல்லோரும் அரிசியையும் கோதுமையையும் சாப்பிட்டால் பஞ்சம் ஏற்படும் நிலைமை வந்துவிடும்.... அதிக மழை இல்லாத பூமிகளிலும் விளையக் கூடிய நவதானியங்களை வளர்த்து, ஆகாரத்தில் அரிசி மாத்திரம் இல்லாமல் இதர தான்யங்களையும் சேர்த்து உண்ணும் பழக்கத்தை நாம் ஏற்படுத்திக் கொண்டால், அது ஒரு பெரிய வீரத் தியாகம். ஒவ்வொருவரும், விசேஷமாய்க் கிராமங்களில் உள்ளவர்கள், ஓர் இம்மி நிலம் கூட வீணாகப் போகாமல், ஏதாவது ஒரு கறிகாயாவது, அகத்திக் கீரையாவது வளர்க்க வேண்டும்.

நம் வீட்டில் அதிகப்படியாக ஒரு சட்டையோ, கம்பளியோ இருந்தால் உடனே அதை யுத்த வீரர்களுக்காக அரசாங்கத்துக்குக் கொடுக்க வேண்டும்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் ஒரு பொழுதாவது, நமது வீரர்கள் வெற்றியடைய வேண்டும், நாட்டுக்கு நலம் ஏற்பட வேண்டும், சத்துருக்களுக்குக்கூட நல்லறிவு வர வேண்டும், அவர்களும் கூடிய வரையில் கஷ்டத்துக்குள்ளாகக் கூடாது என்று ஆண்டவனைப் பிரார்த்திக்க வேண்டும். அப்பொழுது நமக்கு நிச்சயமாக ஜயம் வரும். சத்துருக்கள் சித்திரவதையும், மானபங்கமும், கஷ்டங்களும் ஏற்படுத்திக் கொண்டு வந்திருந்தாலும், ஆண்டவனிடத்திலே அவர்களுக்கும் நல்ல புத்தி வர வேண்டுமென்று பிரார்த்திக்க வேண்டும்.....

ஒவ்வோர் ஊரிலுள்ள ஜனங்களும் எந்த ஆபத்து வந்தாலும் அந்த ஆபத்தை அவரவர்களே சமாளிக்கத் தயாராக வேண்டும். எந்தக் கட்சிக்காரர்களாக இருந்தாலும், எந்த மத முறைகளை அநுசரிப்பவர்களாக இருந்தாலும், ஒன்றாகக் கூடி ஒரே மனமாக நம் நாட்டை நாமே காப்போம்...

நமது நாட்டில் அநாதிகாலமாக வந்த வேத சாஸ்திர சம்மதமான மதத்தோடுகூட இதர நாடுகளிடமிருந்து குடியேறிய எல்லா மதங்களுக்கும் இது வரையிலும் தஞ்சமளித்தது பாரத நாடு. அதை அநுசரித்து, இன்று நாட்டுக்கு வந்த பரீக்ஷா காலத்தில் எல்லா மதத்தினரும் தங்கள் உடல், பொருள், ஆவியைத் தத்தம் செய்து கொண்டிருக்கக் கண்கூடாகக் காண்கிறோம். எல்லாரும் நல்வாழ்வு வாழும்படியான நாடாக இது வளர்ந்து, ஜயமடைந்து, உலகத்துக்கே ஒரு! வழிகாட்டியாக நிற்கவும், இந்தச் சண்டையின் பயனாக, இந்தச் சண்டையில் ஜயத்தின் பயனாக — உலகத்திலே இனி கெட்ட எண்ணமோ, கஷ்டங்களோ, சித்திரவதையோ இல்லாமல் எல்லோரும் ஒரே குடும்பமாக, ஒரே ஆண்டவனுடைய குழந்தைகளாக, சந்தோஷமாக வாழும்படியான நிலையையும் ஆண்டவன் நமக்குப் பாலிப்பாராக.

நம் கடன் பணி செய்து கிடப்பதே.

நன்றி: ஆகாசவாணி



# இது போன்ற காபியை நீங்கள் குடித்திருக்க மாட்டீர்கள்

# நெஸ்கா:.பே

மட்டுமே
காபியின் தனிச் சிறப்பை
முற்றிலும் பெற்றுள்ளது




IS:2791

நெஸ்கா:.பே உயர்ந்த ரக காபிக்கொட்டையிலிருந்து தயாரானது. அது தனிப்பட்ட முறையில் வறுக்கப்பட்டு, நவீன வழியில் திறம்பட தயாரிக்கப்படுகிறது. டின்னைத் திறந்தவுடன் புத்தம் புதிய காபியின் நறுமணம் உங்கள் மனதைக் கவரும். சுவைத்தால் தான் தெரியும், அதன் தனி ருசியும், மணமும். இன்றே வாங்கிப் பருகுங்கள்!



**5**
விநாடிகளில்
காபி
தயார்

நெஸ்கா:.பே உடனே கரையக் கூடிய தூய்மையான காபி. அது, கொதிக்கவைத்தல் முதலிய வழி முறைகளுக்கு முன்னதாகவே உள்ளாகிவிட்டது. ஒரு டீஸ்பூன் நெஸ்கா:.பேயை கோப்பையில் போட்டு வெந்நீர் ஊற்றுங்கள். அருமையான காபி உடனே தயார்! கொதிக்க வைப்பது, வடிகட்டுவது போன்ற எவ்வித கஷ்டமும் இல்லை. ஆகா, எத்தனை எளிமை—எவ்வளவு இனிமை!

**நெஸ்கா:.பே*** இந்தியாவின் இணையற்ற காபி ...
100% தூய்மையானது

*நெஸ்கா:.பே, நெஸ்லே இன்ஸ்டன்ட் காபியைக் குறிப்பிடும் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

NESTLÉ
ஒரு நெஸ்லே தயாரிப்பு

(WT-NCE-333(R)










## செய்திப் படங்கள்

1. சமீபத்தில் பாகிஸ்தான் போரில் அரிய சாகஸங்கள் செய்த விமானிகளோடு ராணுவ மந்திரியும், விமான தளபதியும்.

2. அகோபில க்ஷேத்திரத்திலுள்ள பிரஹலாத வரதர் திருப்பணி நிறைவுற்று மஹா ஸம்ப்ரோக்ஷணம் சமீபத்தில் அகோபில மடம் ஸ்வாமிகள் முன்னிலையில் அதிசிறப்பாக நடைபெற்றது.

3. கள்ளியாம்பூண்டி உயர்நிலைப்பள்ளியில் அமெரிக்க 'கேர்' ஸ்தாபனத்தினரின் அன்பளிப்பான, குழந்தைகளுக்கான ஸிலேட்டு, பென்ஸில், நோட்டுகள், புத்தகங்களடங்கிய பையைச் சிறுவனுக்கு முதன் மந்திரி வழங்குகிறார்.

4. கால்கேட் பாமாலிவ் ஸ்தாபனத்தார் நடத்திய 'அழகிய குழந்தை' புகைப்படப் போட்டிக்கு வந்த படங்களை நீதிபதிகள் பரிசிலனை செய்கின்றனர்.



# வெற்றித்

அகிலன்

## நுழை வாயில்....

நம் நினைவை விட்டு நீங்காத சோதனை மிக்க வரலாற்று நிகழ்ச்சிகள் நடைபெற்று வரும் காலத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நேற்று வரையில் நம்மோடு ஒன்றி வாழ்ந்தவர்கள் நம்மிடமிருந்து பிரிந்து சென்று இன்று நமக்கெதிராகவே போர்க்களத்தில் குதிக்கத் துணிந்துவிட்டார்கள். இன்றைய வரலாற்று ஏடுகளில் வழிந்த செங்குருதி இன்னும் உலரவில்லை.

பாகிஸ்தானம் தன்னை ஒரு சமயச் சார்புள்ள நாடு என்று சொல்லிப் போர் முரசு கொட்டியது; ஆனால் நமது நாட்டின் சார்பில் போர்க்களத்தில் குதித்தவர்களோ பல்வேறு சமயங்கள், இனங்கள், மொழிப் பகுதிகளைச் சார்ந்தவர்கள். அவர்கள் போர்க்களங்களில் காட்டியுள்ள வீர சாகஸங்கள் கற்பனைகளையும் மிஞ்சக் கூடியவை. பழம் பெரும் வரலாறுகளும் காணாத ஒற்றுமையோடு அவர்கள் தீரச் செயல்கள் புரிந்திருக்கிறார்கள்.

இந்தச் சாதனைகளின் அடித்தளம் எது? 'செப்பும் மொழி பதினெட்டுடையோரைச் 'சிந்தனை ஒன்றோடு' திரண்டு எழுந்து நிற்கச் செய்த மூலசக்தி எது? இந்து, முஸ்லிம், சீக்கியர், கிறிஸ்துவர் ஆகியோர் ஒரே கொடியின் கீழ் தேசிய எழுச்சி பெற்றுச் சாதனைகள் புரிகிறார்கள் என்றால், அதற்கான விழிப்பு எப்போது இங்கு முதன்முதலில் ஏற்பட்டது? இந்தக் கேள்விகளுக்கு நான் விடை தேட முயன்றதன் விளைவே இந்த 'வெற்றித் திருநகரா'க உருவெடுத்திருக்கிறது.

விஜயநகரம் என்றாலே வெற்றித் திருநகரம் என்றுதான் பொருள். இந்த நாட்டு வரலாற்றின் முதல் தேசிய எழுச்சியின் சின்னம் அதுவே என்று

# திருநகர்

எனக்குத் தோன்றுகிறது. துங்கபத்திரா நதிக் கரையில் பிறந்த அந்த நகரத்தின் கொடி வடக்கே கலிங்கம் முதல் தெற்கே கன்னியாகுமரி வரை பறந்ததுண்டு. அந்தக் கொடியின் கீழ் தெலுங்கர், தமிழர், கன்னடியர், இந்து, முஸ்லிம், கிறிஸ்துவர் அனைவரும் திரண்டு நின்று அதைக் காக்கத் தங்கள் இன்னுயிரை ஈந்திருக்கிறார்கள். தேசிய உணர்ச்சியின் வலிமை, புகழ், புனிதத் தன்மை இவற்றை முதன் முதலில் ஒளிவிடச் செய்த சிறப்பு வெற்றித் திருநகருக்கு உண்டு.

ஆனால் அந்த நகரமே இன்று நமக்கொரு பயங்கரமான எச்சரிக்கையாகவும் காட்சியளிக்கிறது. துங்கபத்திரா நதிக் கரையில் இன்றைக்கு அதன் அழிக்கப்பட்ட கோட்டைகளையும், இடிக்கப்பட்ட மாளிகைகளையும், சின்னாபின்னப் படுத்தப்பட்ட கோயில் குளங்களையும் பார்ப்பவர்களுக்கு இரத்தக் கண்ணீர் விடாமல் இருக்க முடியாது. 'உலகில் வேறு எந்த நகரமுமே அவ்வளவு செல்வச் சிறப்போடும் உல்லாசக் களிப்போடும் வீரச் செருக்கோடும் வாழ்ந்ததுமில்லை; வேறு எந்த நகரமுமே அவ்வளவு பயங்கரமான முறையில் அழிக்கப் பெற்றதுமில்லை' என்று வரலாறு கூறுகிறது.

காரணமென்ன? மொழி, இன, சமய வேறுபாடுகளைக் கடந்த தேசிய உணர்வு அங்கு மேலோங்கி நின்ற வரையில் அது தலைநிமிர்ந்து நின்றது. உட்பகையும், தன்னலமும், உட்பிளவுகளும் தலைதூக்கியவுடன் அது சரிந்து விழுந்தது.

அது சரிந்து வீழ்ந்தாலும் அதன் ஆன்மாவான தேசிய உணர்ச்சி மட்டும் அழிக்கப்படவேயில்லை. அந்த லட்சியம் ஓர் ஆக்க சக்தியாகும். அந்தச் சக்தி ஒன்றுதான் முதலில் தென்னாட்டை வடமேற்கிலிருந்து வந்த ஊழிப் பெருக்கான முகலாயப் படையெடுப்பிலிருந்து கட்டிக் காத்தது. வட இந்தியாவில் அழிக்கப்பட்ட அளவுக்கு இங்கு நமது அற வாழ்வின் புறச் சின்னங்களும் கலை வாழ்வின் புறச் சின்னங்களும் அழிக்கப்படவில்லை. நமது

இலக்கியம், கலை, பண்பாடு, வாழ்க்கை முறை முதலியவை தெற்கில் நன்கு பாதுகாக்கப்பட்டிருக்கின்றன.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மதுரைத் திருக்கோயிலில் எப்படித் தமிழ்க் குடும்பத்துப் பெண்கள் தங்கள் குழந்தைகளோடு வந்து வழிபாடு நடத்தினர்கள் என்பதை ஒரு சங்கப் பாடல் விவரிக்கிறது. அதே காட்சியை அப்படியே நாம் இன்றும் கண்டு உளம் பூரிக்கிறோம். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நம் குழந்தையின் மழலையில் தவழ்ந்த அதே தமிழை இன்றும் நாம் அப்படியே உருக்குலையாமல் கேட்டு இன்புறுகிறோம். வட இந்தியா இத்தகைய பாக்கியத்தைச் செய்ய வில்லை. காரணம்? மேற்கிலும் கிழக்கிலும் உள்ள இரண்டு பாகிஸ்தானங்களே அதற்குப் பதில் சொல்ல வேண்டும்!

தென்னுட்டில் ஒரு தெற்குப் பாகிஸ்தானம் ஏற்படாமல் இந்த நாட்டின் பண்பாடு, கலை, இலக்கியம் இவற்றைக் காத்த பெருமை விஜயநகரத்தையே சாரும். அதன் தேசியப் பேரெழுச்சியின் உயிர் வாழும் சின்னங்களே தமிழ் நாட்டில் நாம் இன்று காணும் கலைச் செல்வங்கள். 'ஹம்பியின் அழிவுச் சின்னங்கள்' என்ற தோற்றத்தில் காட்சியளிக்கும் விஜய நகரத்தின் மாபெரும் தியாகத்தால் இன்று



தமிழகம், ஆந்திரம், கன்னட நாடு, கேரளம் இவை நிமிர்ந்தோங்கி நிற்கின்றன என்பது வரலாற்று உண்மை.

பயங்கரமான ஊழி வெள்ளப் பெருக்கைப் போல் வடமேற்கிலிருந்து படை யெடுத்து வந்த முகலாயர்களின் கொடுமைக்கு எதிரே ஓர் அரணுக அது நின்றதால் அதற்கு 'இந்துக்களின் சாம்ராஜ்யம்' என்ற சமயச் சாயம் பூசி விட்டார்கள் சில வரலாற்று ஆசிரியர்கள். அது ஒரு தேசிய சாம்ராஜ்யம். வேறு எந்தப் படையெடுப்புக்கள் நடைபெற்றிருந்தாலும் அவற்றைத் தடுத்து எதிர்க்க அது தயங்கியிருக்காது.

இந்த நாட்டு முஸ்லிம்கள் யாவருமே கஜினி மகமதுவுடன் வடமேற்குக் கணவாய் வழியாக வந்தவர்களல்லர். அதற்குச் சில நூறு ஆண்டுகளுக்கு

முன்பே அவர்கள் அரேபியாவிலிருந்தும் பாரசீகத்திலிருந்தும் இங்கு வாணிகம் செய்ய வந்தவர்கள். கஜினி செய்த கொடுமைகளைக் கனவிலும் நினைத்தறியாப் பண்பாளர்கள் இந்த நாட்டுப் பழங்குடி முஸ்லிம்கள். சேர பாண்டியர்கள் காலத்திலேயே வாணிபத்துக்காகவும் கலாசார உறவு வளர்ப்பதற்காகவும் வந்து இந்த நாட்டுக் குடிமக்களாகவே வேரூன்றி விட்டவர்கள் அவர்கள். இந்த மண்ணையே சொந்த மண்ணாகக் கொண்டு.



இந்த மண்ணின் உப்பாலும் உரத்தாலும் வளர்ந்து, இந்த மண்ணுக்காகவே தங்கள் இன்னுயிரையும் நீத்த பெருமை அவர்களுக்கு உண்டு. அவர்களுடைய செல்வங்களையும் மாலிக்காபூரின் ஆட்கள் கொள்ளை கொண்டு சூறையாடிச் சென்றிருக்கிறார்கள் என்பதை வரலாறு மறக்கவில்லை.

விஜயநகரம் என்றவுடனேயே தென்னாட்டு இந்து அரசர்களும் முஸ்லிம் அரசர்களும் தங்களுக்குள் மோதிக் கொண்ட கதைகள் சிலரது நினைவுக்கு வரக் கூடும். அத்தகைய கசப்பான நிகழ்ச்சிகளை நினைவூட்ட நான் என் சிந்தனையைச் செலவிட விரும்பவில்லை. 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு!' என்பதைத் தனது வாழ்க்கையின் சீரிய இலட்சியமாகக் கொண்ட ஓர் உத்தமனின் கதை இது.

வெற்றித் திருநகரத்துத் தேசிய எழுச்சியின் ஒளிச் சுடரை ஏந்திக் கொண்டு அவன் தமிழ் நாட்டுக்கு வந்தவன். அந்த ஒளிச்சுடர் அணைந்து விடாமல் இருப்பதற்காக அவன் தன் காலமெல்லாம் போராடியவன். வேறு யாருடனும் அவன் போராடவில்லை. அவனைப் பெற்றெடுத்த பாசத்தோடு, அவனை அரியணையில் ஏற்றத் துடித்த நட்புறவோடு, அவனை அரவணைத்து மகிழ்வதற்கு ஏங்கிய காதலோடு, அவனது நலனில் ஆர்வம் கொண்ட உற்றம் சுற்றத்தோடு அவன் நீரப் போராடியிருக்கிறான். ஓர் இலட்சியத்துக்காகவே வாழ்ந்து, அதற்காக மற்ற எல்லாத் தியாகங்களையும் மேற்கொண்ட வரலாற்று மனிதன் அவன்.

அவன் துங்கபத்திரா நதிக்கரையில் தெலுங்கனாகப் பிறந்தவன்; வைகை நதிக் கரையில் குடியேறித் தமிழ் நாட்டுக்காகப் பாண்டியனாக வாழ்ந்தவன்; தேசியத் திருமகனாகத் திகழ்ந்த விசுவநாத நாயக்கன் அவன்.

சொல்லில் அவனை வடித்து உங்கள் உள்ளத்தில் உலவவிட வேண்டும் என்ற பேராவலால் இதை எழுதத் துணிந்திருக்கிறேன். நமது நேற்றையப் படுகளத்தில் மாண்டு மடிந்த ஆயிரக் கணக்கான தேசிய வீரர்களின் ஆவி என்னை நமது வரலாற்றில் ஒரு தேசியத் திருமகனைத் தேடத் தூண்டியது. அந்த வீரர்களின் நினைவாக இவனை உங்களுக்கு அறிமுகம் செய்ய விரும்புகிறேன். ஏனென்றால், அவர்களுக்கெல்லாம் வழிகாட்டியாகித் தேசிய உணர்ச்சியை இந்த நாட்டில் ஊன்றி வைத்தவன் அவன்.

கல்லில் வடிக்கப்பட்ட அவன் உருவைக் காண விரும்புகிறவர்கள் இன்றும் அவனை மதுரையில் மீனாட்சி அம்மையின் ஆலயத்தில் சந்திக்கலாம். ஆயிரக் கால் மண்டபத்தைக் கட்டி அதன் தூண் ஒன்றில் பணிவோடு நின்று தன் இரு கரங்களையும் கூப்பி நிற்கிறான் அவன். திருச்சிராப்பள்ளியில் உள்ளவர்களுக்கு அவன் அகழ்ந்து வைத்த தெப்பக்குளத்தைக் காணும் போது அவனுடைய நினைவு வரும்.

கூப்பிய கரங்களோடு நிற்கும் அவன், தான் பிறந்து வளர்ந்த விஜய நகரத்தின் இன்றைய நிலை கண்டு கண்ணீர் வடிக்கிறான். அந்த வெற்றித் திருநகராக மதுரை உயர்ந்து விட்டது கண்டு ஆனந்தம் அடைகிறான். அவன் தன் மோன மொழிகளில் என்னிடம் கூறிய கதையை, அவனைப் போலவே என் இரு கரங்களையும் கூப்பி உங்களிடம் சொல்ல விரும்புகிறேன்.

## முதல் அத்தியாயம்

# நிலத்தில் துடித்த கயல்

திருக்குற்றாலத்துக்கு வடக்கே தென்காசி நகரத்தின் தெற்கு எல்லையாக வளைந்தோடுகிறது சித்திராநதி என்றதொரு சிற்றாறு. அந்த ஆற்றின் கரையிலிருந்து கருக்கிருட்டு நேரத்தில் புறப்பட்டன பத்துப் பன்னிரண்டு குதிரைகள். நெடுந்தூரத்துப் பயணத்துக்கான உணவுப் பொருள்களும், ஆயுதங்களும் அவற்றிடம் இருந்தன. முன்புறம் ஒரு மெய்காவல் வீரன் தலைமையில் நான்கைந்து பேர்களும் செல்ல, இடைநடுவே இருவர் மட்டிலும் சென்றனர்.

தென்பாண்டி நாட்டின் தலைநகரங்களில் ஒன்றாக அப்போது விளங்கியது தென்காசி. மொகலாயப் படையெடுப்புக்களால் சிதறுண்டு போன பாண்டிய சாம்ராஜ்யத்தில், அதன் தெற்குக் கோடியான தென்காசி எப்படியோ தப்பி நின்றது. மதுரையில்கூட அவர்களுடைய ஆட்சி சீர்குலைந்து போய் ஒரு நூற்றாண்டுக்கு மேல் ஆகிவிட்டது. சென்ற மாதம் வரையிலும் மதுரையில் பழைய பாண்டியர்களின் வழி வந்த சந்திரசேகர பாண்டியரே ஆட்சி செலுத்தி வந்தார். என்றாலும் நாடு மீண்டும் சரியான முறையில் தலைதூக்க முடியாமல் தத்தளித்துக் கொண்டுதான் இருந்தது. இந்த நிலையில் மதுரைப் பாண்டியரையும் முறியடித்துவிட்டு அதைக் கைப்பற்றிக் கொண்டான் உறையூரில் ஆட்சி செலுத்தி வந்த வீர சோழன்.

ஆரோக்
கியமான.
பளபளக்கும்
கூந்தலுக்கு...




# டாடாவின் நறுமண கோகோனட் ஹேர் ஆயில்

## தூய தேங்காய் எண்ணெய் அடங்கியது.

டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில் தூய தேங்காய் எண்ணெய் மட்டுமே என்பதை அறிவுள்ள அன்னையர் அறிவர். கூந்தலின் வேர்களுக்குச் சத்தூட்டி, கூந்தல் அடர்த்தியாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கச் செய்கிறது. தவிர, ரோஜா, லேவண்டர், மல்லிகை, புஷ்பா என் மனோகரமான நாலு நறுமணங்களுடனும் வருகிறது டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில்.

கூந்தல் எப்பொழுதும் எழிலுடன் மிளிர டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில்.

SHBI-TCO-94

## ஒரு கிளாஸ்

# கிஸான்

## ஸ்க்வாஷ் அருந்தி இளைப்பாருங்கள்

கிஸான் ஸ்க்வாஷ்—பழ ரசங்களிலிருந்து தயாரானது; ருசிமிக்கது. தானே கனிந்த பழங்களின் வைட்டமின் சத்துகள் அனைத்தும் கொண்டது. அதன் புத்தம் புதுச் சுவை புத்துணர்வளிக்கிறது. அதை உங்கள் குடும்பத்தினர் அனைவரும் ரசிப்பார்கள்—விருந்தாளிகளும் விரும்புவார்கள்.

ஆரஞ்சு, எலுமிச்சை, மாம்பழம் மற்றும் பல ரகங்களில் கிடைக்கிறது—உங்கள் விருப்பத்துக்கு உகந்ததைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுங்கள்.

**மற்ற எந்தத் தயாரிப்பையும் விட கிஸான் ஸ்க்வாஷ் தான் இந்தியாவில் அதிகமாக விற்பனையாகிறது**




**கிஸான் ப்ராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்**

JWT-KP-3720

தென்காசி நகரத்தின் கோட்டை வாயில் கதவுகளைச் சந்தடியின்றித் திறந்து விட்டார்கள் வாயில் காவலர்கள். இடையில் வந்த இருவரில் இளைஞனான திருவல்லப பாண்டியன் வாயில் காவலர்களிடம் இரகசியமான சில கட்டளைகளை இட்டான். குதிரைகள் வெளியேறியவுடன் வாயிற் கதவுகள் மீண்டும் மூடப் பெற்றன. குதிரைகளில் சென்றவர்களும் நகரத்துக்குள் ஒருவரோடு ஒருவர் சரியாகப் பேசிக் கொள்ளவில்லை. குளம்பொலி கேட்டுக் குடிமக்கள் விழித்துக் கொள்ளக் கூடாது என்று நினைப்பவர்கள் போல் நகர எல்லையைத் தாண்டும் வரையிலும் அவர்கள் நிதானமாகச் சென்றனர். காட்டுப் பாதைக்கு வந்த பிறகே அவர்களுக்கு வேகம் பிறந்தது.

''அப்துல்!'' என்று மெய்காவல் வீரர் தலைவனை அழைத்தான், இடையில் சென்றவர்களில் இளைஞனான திருவல்லப பாண்டியன். அப்துலின் குதிரை நின்றது.

''நாம் யார் என்பதோ நம்மோடு பெரிய பாண்டியர் வருகிறார் என்பதோ வழியில் யாருக்குமே தெரியக் கூடாது. வீர சோழனின் ஒற்றர்களிடம் நாம் விழிப்போடிருக்க வேண்டும். அவருக்குப் புகலிடம் கொடுத்து நாம் துணை செய்கிறோம் என்பதற்காக, நாம் வடக்கே போகும் சமயம் அவன் இங்கு வந்தாலும் வந்து விடுவான்.''

''ஆகட்டும், அரசே!'' என்றான் அந்த அரபு நாட்டு வழித்தோன்றலான அப்துல். பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வாணிபம் செய்வதற்காக அரபு நாட்டிலிருந்து வந்து குடியேறியவர்களின் பரம்பரையில் பிறந்தவன் அவன். குதிரைப் படையில் ஒரு சிறு வீரனாக இருந்தவன் தனது கடமையால் உயர்ந்து படைத் தலைவனாகவும் பாண்டியனின் தோழனாகவும் நெருங்கி விட்டான்.

திருவல்லப பாண்டியனுக்கு அவன் மேற்கொண்டிருக்கும் முயற்சி ஆபத்துக்களும் பின் விளைவுகளும் நிறைந்த முயற்சி என்பது தெரியும். இருந்தாலும் தன்னைவிடப் பேரரசரான ஒரு பாண்டியருக்கு அவருடைய ஆபத்துக் காலத்தில் கைகொடுக்க வேண்டும் என்ற ஓர் எண்ணம் அவனுக்கு ஏற்பட்டு விட்டது. வருவது வரட்டுமென்று துணிந்து விட்டான் அவன்.

அவனுக்கு அருகில் வந்து கொண்டிருந்த பாண்டியர் சோர்வும் களைப்பும் மிகுந்தவர் போல் குதிரையின் மீது அமர்ந்து கொண்டிருந்தார். அவருக்கே இயல்பான மிடுக்கும் செருக்கும் கம்பீரமும் அவரிடம் இப்போது இல்லை. வயது நாற்பத்தைந்து அல்லது ஐம்பது இருக்கலாம்; திருவல்லபனைவிடப் பதினைந்து இருபது ஆண்டுகளுக்கு மூத்தவர் அவர்.

''பேரரசே!'' என்று அவரை அன்போடு அழைத்தான் திருவல்லபன். அச்சமும் சஞ்சலமும் கலந்த விழிகளோடு சந்திரசேகர பாண்டியர் அவனைத் திரும்பிப் பார்த்தார்.

''சின்னஞ்சிறு சித்திரா நதிக்கரையிலுள்ள தென்காசியிலிருந்து தொலைதூரத்தில் துங்கபத்திரா நதிக் கரையிலுள்ள விஜயநகரத்துக்கு நாம் புறப்படுகிறோம் என்ற எண்ணமே நமக்கு ஊக்கம் தருகிறதல்லவா?''

'இளம் கன்று பயமறியாது' என்று அவர் தமக்குள் நினைத்துக் கொண்டு மௌனமாக வந்தார். வாயைத் திறப்பதற்கே அவர் அஞ்சுகிறார் என்பதையும் புரிந்து கொண்டான் திருவல்லபன்.

''பேசாமல் வருகிறீர்களே!''

''விஜயநகரத்துக்குப் போய்ச் சேருவது என்பது அவ்வளவு எளிதானதல்ல. மதுரை, உறையூர், காஞ்சி இவைகளையெல்லாம் நாம் கடந்து செல்ல வேண்டும். நீண்ட நெடும் பயணம் இது. நாட்டு நிலைமையும் சாதகமானதாக இல்லை.''

''முடியாதவை என்று நினைத்து எதற்காக நாம் அஞ்ச வேண்டும்? நினைப்பதை முடித்தே தீருவோம் என்று நம்புங்கள்!''

சந்திர சேகர பாண்டியர் மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்தார். அவருடைய நம்பிக்கை இழந்த தன்மைதான் திருவல்லபனுக்கு மிகவும் மனவேதனையை அளித்தது. அவர் வீரத்திலோ விவேகத்திலோ சளைத்தவரல்லர். குடிமக்களிடம் பேரன்பு கொண்டவர். அதற்காகவே அமைதியோடு வாழ முற்பட்டவர்.

''திருவல்லபா! நீருக்குள் துள்ளித் திரியும் கயல்மீனைக் கடுமணலில் இழுத்துப் போட்டு விட்டால் அதனுடைய கதி எப்படி இருக்கும்? வீரசோழனை நான் சோழன் என்றோ என்னை ஒரு பாண்டியன் என்றோ நான் நினைக்கவில்லை. சேரன், சோழன், பாண்டியன் என்று பிரிந்து நின்று போரிட்டு வந்த தமிழ்ப் பரம்பரை மொகலாயப் படை எடுப்போடு ஒழிந்து விட்டது என்று நினைத்தேன். ஒரு தமிழன் இன்னொரு தமிழனின் முதுகில் நயவஞ்சகமாக வேல் பாய்ச்சி விட்டான். இடையில் இருநூறு ஆண்டுகளுக்கு மேல் இந்த நாட்டு அரசர்களும் குடிமக்களும் பட்ட பாட்டை அவன் அதற்குள் மறந்து விட்டான். நம்பிக்கையின் ஆணி வேர் எனக்குள் அறுந்து விட்டது.''

''பேரரசே! நம்பிக்கையை மட்டும் இழக்காதீர்கள். உயிருள்ள வரையில் நம்பிக்கையும் அதோடு ஒன்றியிருக்க வேண்டும். நம்பிக்கை ஒன்று மட்டும் இருந்தால் நாம் இழந்த அனைத்தையுமே மீட்டு விடலாம்.''

''நம்பிக்கை!'' என்று சொல்லி ஒரு வறட்டுச் சிரிப்புச் சிரித்தார் பாண்டியர் ; ''அந்த நம்பிக்கை இந்த நாட்டில் எங்குமே இருப்பதாகத் தோன்றவில்லை; வடக்கே போகப் போகத்தான் உனக்கு அது தெரியும்.''

அவர்களது நீண்ட நெடும் பயணம் பல வேறு இடையூறுகளுக்கிடையில் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அங்கங்கே மறைவிடங்களில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டு சென்றார்கள். கூடுமான வரையிலும் நாடு நகரங்களிலிருந்து விலகியே தங்களது வழிப் போக்கை மேற்கொண்டார்கள்.

மதுரையைத் தாண்டி வடக்கே செல்லும் போதுதான் திருவல்லபனுக்குப் பெரிய பாண்டியரின் பேச்சு புலப்படத் தொடங்கியது. படையெடுப்புக்களின் பயங்கரமான கொடுமைகளிலிருந்து தப்பிய தென்பாண்டி நாட்டில் பிறந்து வளர்ந்தவன் அவன். நாடு முழுவதுமே தாமிரவருணிக்குத் தெற்கி



மாப்பிள்ளை: ரிட்டர்ன் டிக்கெட் வாங்கிண்டு வந்தேன். ஆனால், நான் இப்போ ஊர் திரும்பல்லே. டிக்கட் வீணாகாமல் இருக்க நீங்க ஊருக்குப் போங்க மாமா!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

விருந்த பருதி போல் வளத்தோடும் கலையோடும்தான் இருக்குமென்று அவன் நம்பிக் கொண்டிருந்தான்.

ஆனால் வழியெங்கும் அவன் கண்ட பாழடைந்த மண்டபங்களும், இடிபாடுகள் நிறைந்த மாளிகைகளும், மூடப்பட்ட கோவில்களும் முதன் முதலில் அவனுக்குப் பேரதிர்ச்சியைத் தந்தன. கிராமங்களிலும் சிற்றூர்களிலும் தென்பட்ட குடிமக்கள் குதிரைகளின் குளம்பொலிகளைக் கேட்டவுடனேயே நாலாபுறங்களிலும் சிதறி ஓடினார்கள். வீட்டுக் கதவுகளைத் தாழிட்டுக் கொண்டு சாளரங்களின் வழியே பெண்களும் குழந்தைகளும் அவர்களைப் பார்த்த பார்வையின் அச்சத்தை அவன் வேறு எங்கும் எப்போதும் கண்டதில்லை.

வயல்கள் விளைச்சலின்றி வாடிக் கொண்டிருந்தன. வாணிபத்தின் பரபரப்பும் தொழில்களின் சுறுசுறுப்பும் தென்படவில்லை. எதிர்ப்பட்ட முகங்களெல்லாம் வறுமை, சோர்வு, நம்பிக்கை வறட்சி இவற்றைக் கொண்ட நடைப்பிணங்களின் முகங்களாகவே திருவல்லபனுக்குக் காட்சி தந்தன.

தமிழர்களா இவர்கள்? தமிழ் நாடா இது? சோறுடைய சோழ நாடு, முத்துக் கொழிக்கும் பாண்டிய நாடு, கோலாகலக் குதூகலங்கள் நிறைந்த கலை நாடு என்றெல்லாம் சொல்வார்களே! அந்த நாடு இதே நாடுதானா? திருவல்லபன் சந்திர சேகர பாண்டியரைத் திரும்பிப் பார்த்தான். அவருடைய ஒளியிழந்த விழிகளில், களையிழந்த முகத்தில், சோர்வு நிறைந்த தோற்றத்தில் அன்றையத் தமிழ்நாடு அவனுக்குச் சட்டென்று புலப்பட்டது.

வீரசோழனின் ஆட்சி முறையும், பழந் தமிழரின் ஆட்சி முறையாக இருக்கவில்லை. வழியில் அங்கங்கே வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் எதிர்ப்பட்டார்கள். ஊருக்கு ஒருவன் தன்னை அந்த ஊரின் சிற்றரசன் என்று கூறிக் கொண்டு ஆட்சியின் பெயரால் மக்களைக் கொள்ளையடித்து வந்தான். கிராமங்களில் தடியெடுத்து அடிக்கத் துணிந்தவர்கள் எல்லாருமே தண்டல்காரர்கள். குடிமக்களின் பொருள், எளியவர்களின் உயிர், இளம் பெண்களின் மானம் எதற்குமே அங்கு பாதுகாப்பு இருந்ததாகத் தெரியவில்லை. இந்த நிலையில் இறைவனின் வழிபாட்டுக்கோ, ஆடல்களுக்கோ, பாடல்களுக்கோ, மனிதரின் நம்பிக்கையை வளர்க்கும் சாதனங்களுக்கோ அங்கு வழியே இல்லை.

வழக்கம் போல் ஒரு கிராமத்தின் எல்லையிலிருந்த பாழடைந்த மண்டபத்தில் அவர்கள் இரவுப் பொழுதைக் கழிப்பதற்காகத் தங்கினார்கள். விருந்தோம்பல் எனும் பண்பே மறக்கப்பட்டு விட்டதால் குடிமக்களின் வீடுகளிலிருந்தோ சத்திரம் சாவடிகளிலிருந்தோ அவர்களால் எவ்வித உதவிகளும் பெற முடியவில்லை. சத்திரம் சாவடிகளாக இருந்தவை இப்போது குட்டிச்சுவர்களாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தன. ஆகவே, எப்படியோ தங்கள் உணவைத் தாங்களே சித்தம் செய்து உண்டு முடித்தார்கள் அவர்கள்.

பாழ் மண்டபத்தில் நிலவு மட்டும் தங்கு தடையின்றித் தன் ஒளியைப் பொழிந்து கொண்டிருந்தது. நெடுமூச்செறிந்தபடியே சுவரில் சாய்ந்திருந்த சந்திரசேகர பாண்டியரின் அருகில் சென்று உட்கார்ந்தான் திருவல்லபன்.

''எத்தனையோ போர்க்களங்களைக் கண்டிருக்கிறது இந்த நாடு. தமிழர்கள் தங்களுக்குள் போர்களை நடத்தாமல் அமைதியாக வாழ்ந்ததே யில்லை. போர்கள் முடிந்தவுடன் மீண்டும் நாடுகள் புது வலிமை பெற்று நிமிர்ந்து நிற்பதுண்டு. அப்படியிருக்கும் போது, எவ்வளவோ காலம் கழிந்த பிறகும் இந்த நாடு......'' என்று திருவல்லபன் தொடங்கினான்.

''மரங்களின் இலைகளையும் கிளைகளையும் வெட்டினால் மீண்டும் தளிர்க்கும். அடிமரத்தோடு சாய்த்து விட்டாலும் மறுபடியும் அதில் பசுமை குலுங்கும். ஆனால் குடிமக்களின் அறவாழ்வுப் பண்பாட்டின் ஆணிவேரையே ஓர் ஊழிப்பெருக்கு அடித்துக் கொண்டு போய் விட்டது. நம்பிக்கையே போய் விட்டது என்றால் மறு வாழ்வுக்கு வழி ஏது?''

''நம்பிக்கை மட்டும் போகவில்லை, அரசே !'' என்று கூறிக் கொண்டு அவர்களின் அருகில் வந்து நின்றான் அப்துல் ; ''அது ஒன்று இருப்பதால்தான் நாம் இப்போது விஜயநகரத்துக்குப் புறப்பட்டிருக்கிறோம்!''

''உன்னுடைய நம்பிக்கை வாழட்டும் ; வளரட்டும்!'' என்று அவனைத் தம் மன நிறைவோடு வாழ்த்தினார் பாண்டியர். அவருக்கு அவனுடைய ஆறுதல் மொழி அப்போது அருமருந்தாக இருந்தது.

**வ**ழக்கம்போல் உறக்கமற்ற இரவுகளைக் கழிக்கும் பாண்டியர் மறுநாள் பொழுது புலர்ந்தவுடன் எழுந்து விட்டார். அந்தப்




# சில ஆகாரங்கள் உங்களுக்கு ஒத்துக்கொள்ள வில்லையா?

அனேக ஜனங்கள் ஆகார க்ரமக் குறைவால் அஜீரணம், அல்லது மலச் சிக்கல் முதலியவைகளால் அவதிக்குள்ளாகிறார்கள். அப்பொழுது உங்களுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மெக்னீஷியா தேவைப்படுகிறது.

ஆகார க்ரமக் குறைவால் உங்களுக்கு ஏற்படும் புளிப்பான ஏப்பம், வயிற்றில் ஏற்படும் எரிச்சல், குமட்டல் முதலியவற்றை ஒரு நொடியில் நிவர்த்தி செய்கிறது.

மலச் சிக்கல், அதனாலேற்படும் சோர்வு முதலிய உபாதைகளை நீக்கி, பூரண உடல் நலம் பெறுவதற்கு பிலிப்ஸ் உதவுகிறது.

அதனால் அடுத்த முறை அதிகப்படியான உணவு உட்கொள்ள நேரிட்டால், உடனடியாக பிலிப்ஸ் மில்க் ஆப் மெக்னீஷியா உபயோகிக்கவும். அது பலனளிக்கும்!




# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா

மான்யுபாக்சரர் : ரிஜிஸ்டர்ட் யூஸர்

டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

62, பன்டல் ரோட், கல்கத்தா-19

பாழுடைந்த மண்டபத்தின் சில பகுதிகள் கருங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. அவற்றைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தார் பாண்டியர். கதிரவன் ஒளியில் ஏதோ சில எழுத்துக்கள் ஒருபுறம் செதுக்கப்பட்டிருப்பது தெரிந்தது. உற்றுக் கவனித்தார். அருகில் சென்று அவற்றைப் படிக்க முயன்றார்.

படிக்கப் படிக்க அவர் விழிகளில் நீர் ஊற்றுப் பெருக்கெடுக்கத் தொடங்கியது. துடைக்கத் துடைக்க அவரால் தம் கண்ணீரைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. கண்ணீரின் வழியே எழுத்துக்கள் பூதாகாரமாய் உருவம் பெற்று அவர் உள்ளத்தில் ஊழித் தாண்டவம் புரிந்தன. தமது நிலையையும் மறந்து அவர் தம் தலையில் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டார்.

பின்னர் தமது தலையையே அந்தக் கல்லில் மோதத் தொடங்கி விட்டார். இரத்தம் வழிந்தது. அந்த எழுத்துக்களின் மீது.

ஓடோடியும் வந்த அப்துல் பதறிப்போய் அவர் தலையைப் பற்றிக் கொண்டான். சத்தம் கேட்டு அங்கு ஓடி வந்த திருவல்லபனுக்கோ ஏதும் புரியவில்லை.

''அரசே, என்ன இது! இப்போது என்ன நேர்ந்து விட்டது?''

''இப்போது ஒன்றும் நேரவில்லை. எப்போதோ நேர்ந்து விட்டது. நான் பிறந்த குலத்துக்கே மாறாப் பழியைத் தேடி வைத்தவனின் கதையை இதில் ஒருவன் செதுக்கியிருக்கிறான். இந்த நாட்டுக்கே பெரும் பழி தேடிய அந்தப் பாண்டியனின் செயலுக்காக நான் இந்த இடத்திலேயே உயிர்விட்டாலும் அந்தப் பாவம் தீராது. படித்துப் பார் இதை! படித்துவிட்டு இன்னும் நான் உயிரோடுதான் இருக்க வேண்டுமா என்று சொல்...!''

இளைஞர்கள் இருவருமே அந்தக் கல்வெட்டைப் படித்தார்கள். அவர்கள் படிப்பதற்கு முன்னால் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு எவனோ ஒரு சிற்பி தன் மன வேதனையை அதில் கொட்டிவிட்டுப் போயிருந்தான். கல்லும் சொல்லும் சேர்ந்து அவர்கள் நெஞ்சங்களைக் கசக்கிப் பிழியத் தொடங்கின.

''குமரிக் கடலுக்குத் தெற்கே ஈழத்திலும் வடக்கே காஞ்சியிலும் கயல்கொடி பறக்கவிட்டு அரசாண்டான் குலசேகர பாண்டியன். அவன் மகன் சுந்தரபாண்டியன் தன் தம்பி வீரபாண்டியனிடமிருந்து அரசைப் பறிக்க வேண்டி, வடக்கே தில்லியிலிருந்து வந்த மாலிக்காபூரைத் தன் தம்பி மேல் படையெடுக்கச் சொன்னான். வந்தவன் தம்பியோடு நிற்கவில்லை. அந்தப் படையெடுப்பிலே அனைவரும் செத்தும் கெட்டும் போயினர், வெள்ளத்தாலும் கலகத்தாலும் பாழாகி விட்டது.''

சந்திரசேகர பாண்டியர் குமுறினார்:

''இந்த நாட்டுக்கே என்றுமே வெளிப் பகையால் கேடு நேர்ந்ததில்லை. என் குலத்தில் பிறந்த ஓர் அண்ணனும் தம்பியும் அடித்துக் கொண்டதால்தான் இந்த விளைவே வந்து விட்டது. பாண்டிய சாம்ராஜ்யத்தை அரும்பாடுபட்டு உருவாக்கிய ஓர் உத்தமனும் சுந்தரபாண்டியன் என்ற பெயருடையவன் தான். இந்த நாட்டையே அழிக்கத் துணிந்த ஒரு துரோகியும் அவன் பெயரைத்தான் சூடிக் கொண்டிருக்கிறான்!''

திருவல்லபனும் அப்துலும் எவ்வளவோ ஆறுதல் கூறிப்பார்த்தார்கள் பாண்டியருக்கு. அவருடைய துயரம் அடங்கியபாடில்லை.

''பேரரசே! பாண்டியனுக்குப் பாண்டியன் பகை கொண்ட பழங் கதையை இப்போது மறந்து விடுங்கள். இப்போது உயிர் வாழும் தங்களையும் என்னையும் நினைத்துப் பாருங்கள். நான் தங்களோடு புறப்படத் துணிந்தபோது, தங்களுக்குத் துணை நிற்பதால் என்னுடைய நாடே பறி போனாலும் போகட்டும் என்றுதான் வந்திருக்கிறேன். புதிய பாண்டியர்கள் நாம்!''

சந்திரசேகர பாண்டியர் வாயடைத்து நின்றார். அவர் கண் முன்னே வீறு கொண்டெழுந்த இளைய தலைமுறையின் சின்னமாகத் திருவல்லபன் நின்று கொண்டிருந்தான்.

''பேரரசே! ஓர் விண்ணப்பம்!'' என்று பணிவோடு கூறினான் அப்துல்; ''அன்று வந்து நாட்டை அழித்த அந்தப் பழைய மாலிக்காபூரை இனி மறந்து விடுங்கள்; இந்த நாடு எனக்கும் சொந்தமான நாடு; இந்த நாட்டைக் காப்பாற்ற நான் இருக்கிறேன்; என்னுடைய உயிருக்கும் மேலானது இந்த நாடு!''

அவர்கள் இருவரையும் அப்படியே ஒன்று சேரத் தம் மார்போடு தழுவிக் கொண்டார் சந்திரசேகர பாண்டியர். ''இப்போது எனக்குப் புதிய நம்பிக்கை பிறந்து விட்டது!'' என்று நாத்தழுதழுக்கக் கூறினார். (தொடரும்)



# இன்பமான கனவுகள் உட்வர்ட்ஸுக்கு நன்றி!




மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**



# சேவைக்கு ஒரு சகோதரி

**மோனிகா ஃபெல்டன்**

**— அநுத்தமா**

அவர்கள் விஜயவாடாவில் ரயிலை விட்டு இறங்கிக் கிருஷ்ணாநதி தீரத்தில் ஒரு சத்திரத்தில் தங்கினார்கள். அங்கு யாத்திரீகர்களும் சந்நியாசிகளும், நாட்டின் பல்வேறு கோடிகளிலிருந்தும் வந்திருந்த மற்ற ஜனங்களுமாகக் கூட்டம் நிரம்பி வழிந்தது. நல்ல உயரமுள்ளவர்களும், கூர்மையான முகத்தை உடையவர்களுமான வடநாட்டவர், தாங்கள் உண்ணும் ரசகுல்லாக்களைப் போல மெத்தென்று உருண்டு திரண்ட தோற்றம் கொண்ட வங்காளிகள் ஆகியோர் அங்கு வந்திருந்தனர். சாய்வான கண்களை உடைய அஸ்ஸாமியர்களும், நல்ல சிவப்பான பஞ்சாபியர்களும், மகராஷ்டிரப் பெண்மணிகளும் இருந்தனர். எல்லாவற்றையும் விட விநோதமான காட்சி, ஒருவன் சத்திரத்துக் கிணற்றிலிருந்து ஒருலோட்டா நீர் கூடப் பிடிக்காத ஒரு சிறு செம்பில்

கிணற்றிலிருந்து தண்ணீர் இழுத்துத் தன் மீது ஊற்றிக் கொண்டிருந்தது தான். எத்தனையோ முறை சேந்திச் சேந்தி ஊற்றியும் அவன் உடலோ, இடுப்பிலிருந்த அழுக்குப் படிந்த வேஷ்டியோ நனையவேயில்லை. இதில் வேடிக்கை என்னவென்றால், அவன் நன்றாக அமுந்திக் குளிக்கக் கூடிய நதியானது கூப்பிடு தூரத்தில்தான் இருந்தது. இரண்டு நிமிஷ நடை, அவ்வளவு தான்!

சுப்புலக்ஷ்மியைப் போலவே இன்னும் பலரும் அக்காட்சியைப் பார்த்து வியந்து கொண்டிருந்தார்கள். கடைசியில் அம் மனிதன் ஒரு மூட்டையைத் திறந்து பட்டு வேஷ்டி ஒன்றை எடுத்துக் கட்டிக் கொண்டான். இதுவும் சாப் பாட்டுக் கறைகளும், சந்தனப் பூச்சும் நிறைந்து அழுக்காகவே யிருந்தது.

''ஏன், துவைக்கவில்லை?'' என்று யாரோ முணுமுணுத்தார்கள்.

இப்படிக் கேட்டவருக்கே காரணம் நன்கு தெரியும். அது மடி வஸ்திரம். ஆகவே, துவைக்கப்படவில்லை! ஒரு தரம் நனைத்ததை மடிக்கு உபயோகப் படுத்த வேண்டும் என்றால் அன்றாடம் அது துவைக்கப்பட வேண்டும். இதைச் செய்ய அவன் விரும்பவில்லை!

சுப்புலக்ஷ்மி தனக்குள் சற்று வேதனையுடன் சிரித்துக் கொண்டாள். நமது நாட்டில் எத்தனையோ பழக்க வழக்கங்கள் மூட நம்பிக்கைகள் அன்னிய தேசத்தினர் குற்றங்காணத் தகுந்தனவாக இருக்கத்தான் செய்கின்றன என்பதை அவள் முதன் முதலாகத் தனக்குத் தானே ஒப்புக் கொண்டாள். ஆனால் மேனாட்டவர் இவற்றையெல்லாம் விட்டு விட்டுப் பொருந்த மற்றதான எதையோ நிந்திக்கிறார்கள் என்பதுதான் துர்ப்பாக்கியம்.

மறு நாள் அவர்கள் மேலும் பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள். கோதாவரிக் கரையிலிருக்கும் ராஜ மந்திரியில் இறங்கிய போது அவ்வூர் ஸ்டேஷன் மாஸ்டர் அவர்களைத் தம் வீட்டில் விருந்தினராக இருக்கும்படி அழைத்தார். அவரும் அவர் மனைவியும் தெலுங்கு பிராமணர்கள். இவர்கள் சந்தோஷத்தோடு அவரது அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள்.

அங்கே இல்வாள், விருந்தினர்களை, அதிலும் பெண்மணிகளை உபசரிப்பதில் விசேஷ சிரத்தையும் மகிழ்ச்சியும் கொண்டாள். தனக்கு வெகு நாட்களாகப் புரியாதிருந்த சில விஷயங்களை இவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று அவளுக்கு ஆசை.

ஆண் பிள்ளைகள் கண் மறைவாகச் சென்ற பிறகு அந்த அம்மாள் கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தாள். ''சென்னை நகரத்தில் ஐரோப்பியப் பெண்களை நீங்கள் சந்திப்பது உண்டா?'' என்று கேட்டாள். ''ஓ, உண்டு'' என்று விசாலாட்சியும், மகளும் ஒப்புக் கொண்டார்கள்.

அந்த ஸ்டேஷன் மாஸ்டரின் மனைவி தன்னுடைய ஆயுளில் ஓர் ஐரோப்பியப் பெண்மணியிடமும் பேசியது இல்லை. அவர்களுடன் பேசிய எந்தப் பெண்ணையும் இதுவரை கண்டதுமில்லை. அவள் கேட்டாள்: ''அவர்கள் நேரே சொர்க்கத்திலிருந்தா வருகிறார்கள்?''

தாயும் மகளும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வதைத் தவிர்க்க முயன்றார்கள். அப்படி யிருந்தும் சிரிக்காமலிருக்க முடியாது போல் தோன்றியது.

விசாலாட்சி கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டு பதிலளித்தாள். ''இல்லை; அவர்கள் ஐரோப்பாவிலிருந்து வருகிறார்கள். அநேகமாக, இங்கிலாந்திலிருந்துதான்.''

''அது எனக்குத் தெரிந்ததுதான். அவர்கள் இந்த உலகத்துக்கு எப்படி வருகிறார்கள் என்று கேட்கிறேன். அவர்கள் நம்மைப் போல் பிறக்க மாட்டார்கள் இல்லையா?''

''கண்டிப்பாக நம்மைப் போல் தான் பிறக்கிறார்கள்.''

''நாம் படும் பாடெல்லாம் பட்டு நம்மைப்போல் கஷ்டமா படுகிறார்கள்?''

''ஆமாம்! கட்டாயமாக!''

''அது எப்படி முடியும்? நம்மைப் போல் கருப்பாகவும் கடினமாகவும் அவர்கள் இல்லையே? அவர்கள் மிருதுவாக, வெள்ளையாக, அழகாக இருக்கிறார்களே? அவர்களைப் பார்த்தால் தேவதைகள் மாதிரி இருக்கிறதே? அதனால் அவர்கள் நேரே கடவுளால் அனுப்பப்படுகிறார்கள் என்றும், அவர்கள் குழந்தைகளும் அவ்வாறே வருகிறார்கள் என்றும் நான் நினைத்தேன். அப்படி இல்லை என்பதை என்னால் நம்பவே முடியவில்லை!''

இன்னமும் முழுமையாக நம்பிக்கை பிறக்காததால் அவள் மேலே மேலே கேள்விகள் கேட்டுக் கொண்டே போனாள்.

சகோதரி இப்போது என்னிடம் கூறினார்: ''உண்மையில் இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. உடல் நிறத்துக்கு மனிதர்கள் எவ்வளவு முக்கியத்துவம் அளிக்கிறார்கள் என்பது தெரிந்த விஷயம்தான். நல்ல சிவப்பாக இருக்கும் பெண்ணுக்குச் சுலபமாக வரன் கிடைக்கிறது. ஹிந்து மதக்





நீங்களும் அழகாக விளங்கலாம்

# லாக்டோ-காலமைன் உபயோகித்தால்

## ஏனெனில் அது ஒரு சாதாரண அழகு சாதனம் மட்டுமல்ல, சருமத்திலுள்ள குறைகளை நீக்கி ஒளியுடன் மிளிரச் செய்கிறது.

சருமத்திற்கு இதத்தைச் செய்யும் "காலமைன்" "விச்-ஹேஸல்" (பனிப்பிரதேசங்களின் வளரும் ஓர் வகை மரத்தின் திரவம்) ஆகிய உயர்தர மூலப் பொருள்கள் "லாக்டோ-காலமைனி"ல் சேர்க்கப் பட்டிருப்பதால் உங்கள் சருமம் இயற்கைப்பொலிவுடன் பளபளக்க உதவுகிறது. சருமத்தில் உள்ள குறைபாடுகளை அகற்றி சுத்தப்படுத்துகிறது. லாக்டோ-காலமைன் அவற்றை அடியோடு மறைத்தும் விடுகிறது. பவுடர் பூச்சுக்கு முன்பு உபயோகிக்க இது மிகச் சிறந்தது. சருமத்துடன் ஒன்றிப்போவதுடன் சருமத்தை பட்டுப்போல மழமழப்பாக்கி பிரகாசிக்கச் செய்கிறது. வெய்யிலினால் பாதிக்கப்பட்ட சருமத்திற்கு இதம் அளிக்கிறது. சருமத்தில் உள்ள குறைபாடுகளை மறைத்துப் போக்கிக் குணம் அளிக்கும் அழகு சாதனம் லாக்டோ-காலமைன் ஒன்றுதான். எண்ணெய் பசையற்றது. மெல்லியது. தினசரி உபயோகத்துக்கு நேர்த்தியானது.




குருக்ஸ்

இயற்கை அழகு பொலிய வகை செய்கிறது **லாக்டோ-காலமைன்**

லாக்டோ-காலமைனில் இதர வகைகள்: கிரீம், (ஆடை) பால்க்(பவுடர்)

கடவுள்களில் சிலர் நம்மைப் போல் பிறவி எடுத்தார்கள். வேறு பலர் அவ்வாறல்ல. ஞானிகளிலும் பலர் சாதாரண மக்களைப் போல் பிறக்காமல், மரத்தடியிலும், செடிப் புதர்களிலும் எங்கெல்லாமோ குழந்தைகளாகக் கிடந்து கண்டெடுக்கப்பட்டவர்கள் தான். ஆகவே, பாவம், இந்த அம்மாள் இயல்பாகவே, ரொம்பப் பெரிய மனிதர்களெல்லாம் மக்களைப் போல் இவ்வுலகில் ஜனிப்பதில்லை என்ற நம்பிக்கையோடு வளர்ந்து வந்திருக்கிருள். அக்காலத்தில் அநேகர் ஐரோப்பியர்களை, அவர்கள் நிறம் காரணமாகவே, மற்ற மனிதப் பிறவிகளைவிட மிகவும் மேலானவர்கள் என்று கருதினர்கள். அவர்களுக்குச் சாமானிய மக்களுக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்கள் சிரமங்கள் உண்டாகாதென நம்பினர்கள்.''

கல்கத்தாவுக்குச் செல்லும் பிரயாணம் மிக நீண்டதாகவும், வெப்பம் மிகுந்ததாகவும் இருந்தது. அந்தப் பெரிய நகரம் கூட்டமும் தூசியும், ஓயாத கூச்சலுமாக ஆயாசம் தருவதாக இருந்தது. வங்காளப் பிராமணர்கள் தென்னிந்தியப் பிராமணர்களை விடப் பல வகையில் வேறுபட்டு இருந்தார்கள். பேச்சில் மட்டுமல்ல, பழக்க வழக்கங்களிலும் அவர்கள் வேறு இனத்தவர் போல் இருந்தார்கள். தாங்கள் சைவ உணவு உண்பவர்கள் என்று கூறிக் கொண்டாலும், உண்மையில் அவர்கள் அவ்வாறு இல்லை என்பதை அறிய சுப்புலக்ஷ்மிக்கு அருவருப்பாக இருந்தது. அவர்கள் முட்டை உண்டார்கள். அதைவிட மோசம், மீன் தின்றர்கள். இதைப் பற்றி அவர்கள் வெட்கப்பட்டுக் கொள்ளவுமில்லை. இது எப்படியாலுைம் அவர்கள் மிகவும் அன்பாகவும் சிநேக பாவம் உள்ளவர்களாகவும் இருந்தார்கள். இரவில் வெகு நேரம் வரையில் கண் விழித்துப் பேசிக் கொண்டிருப்பதை அவர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தபடியால் அவர்களுடைய விருந்தினரான சுப்புலக்ஷ்மி குடும்பத்தினரும் படுக்கைக்குச் செல்லப் பன்னிரண்டு மணி ஆகிவிடும். சென்னையில் இரவு ஒன்பது மணிக்கு எல்லோரும் உறங்கி விடுவார்கள். எட்டு மணிக்கே படுக்கப் போவதுமுண்டு. ஆகவே ஒரு வாரக் கடைசியில் அவளும் அவள் பெற்றேரும் காசிக்கு ரயில் ஏறியபோது சுப்புலக்ஷ்மிக்கு இருந்த அசதியில், ரயிலில் உடனே உறங்கிவிடாமல் இயற்கைக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டு போவ



மனைவி: ''என்ன தீபாவளிக்கு இன்னும் ஒன்றும் வாங்கியாகல்லேயே!

கணவன்: அதுதான் என் பிராணனை வாங்கிண்டிருக்கிறதே!

தற்கு எவ்வளவோ மனேதிடம் வேண்டியிருந்தது. காசியில் ஜாகையை அடைந்ததும் உடனே அவள் தூங்கப் போய் விட்டாள்.

அவள் விழித்துக் கொண்டபோது வானமும் பூமியும் ஒளி குன்றித் தோற்றமளித்தன. அவள் தாயார் படுக்கையருகே நின்றிருந்தாள்.

''என்ன மணி?'' என்று கேட்டாள் பெண்.

''ஏழு.''

''சாயந்திரமா, காலேயா?''

அவள் தாயார் புன்முறுவல் பூத்தாள். ''இரவுதான். அதனுல் நீ ஏதாவது சாப்பிட்டுவிட்டு மறுபடியும் தூங்கலாம்'' என்றுள்.

மறு நாள் சுப்புலக்ஷ்மி விழித்துக் கொண்டபோது, தான் ஓர் அருமையான வீட்டில் இருப்பதை உணர்ந்தாள். அவளுடைய அறை ஜன்னல் வழியாகப் பார்த்தபோது கங்கை தெரிந்தது. கீழே சென்றபோது பெரிய பூஜை அறையில் அழகான படங்களையும் விக்கிரகங்களேயும் கண்டாள். பூஜைக்குத் தயாராகப் பழங்களும் மலர்களும் வைக்கப் பட்டிருந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக, பிரார்த்தனை செலுத்த வந்து அந்த வீட்டில் தங்கியிருந்தவர்களில் இருவர் இளம் தமிழ்க் கவி சுப்பிரமணிய பாரதியாரின் உறவினர்கள் என்று அறிந்து மகிழ்ந்தாள் சுப்புலக்ஷ்மி. திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்தவரான பாரதி காசியில்தான் படித்தார் என்பதும் இப்பொழுது சென்னையில் ஒரு பத்திரிகையில் தொழில் புரிந்து வருகிறர் என்பதும் அவர் தன்னைவிட நான்கு வயதே மூத்தவராயினும் தென்னிந்தியா முழுவதும் அவர் கவிதைகள்

ஏற்கனவே பிரபலம் அடைந்திருக்கின்றன என்பதும் அவளுக்குத் தெரிந்தவைதான். குற்றாலத்தில் சில நாட்கள் இருந்தபோது மற்ற சிறு பெண்களுடன் சேர்ந்து கும்மி கோலாட்டம் கற்றுக் கொண்டிருந்த சுப்புலக்ஷ்மி ''பெண்கள் விடுதலைக் கும்மி'' என்ற பாரதியாரின் கவிதையையும் ஆர்வத்துடன் படித்திருக்கிறாள்.

பாரதியார் சுதந்திரம் என்று குறிப்பிட்டது ஆங்கிலேயரது ஆட்சியிலிருந்து விடுதலை என்ற கருத்தில் மட்டுமில்லை. அதைவிட அதிகமான அர்த்தமுண்டு அவர் கையாண்ட அந்தச் சொல்லுக்கு. உண்மையான விடுதலை வேண்டுமானால் தமிழர்கள் மூட நம்பிக்கைகள், அறியாமை, மற்றும் பழைமையான உதவாத கட்டுப்பாடுகளினின்றும் விடுபடுவது அவசியமாகும் என்று நம்பினார்.

பாரதி தம்முடைய இந்தக் கவிதையில் தீர்க்கதரிசனத்துடன் எதிர் காலத்தைக் காண்கிறார்:

''ஏட்டையும் பெண்கள் தொடுவது
தீமையென்றெண்ணி யிருந்தவர்
மாய்ந்து விட்டார்.

வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி
வைப்போமென்ற விந்தை மனிதர்
தலை கவிழ்ந்தார்.

கும்மியடி! தமிழ் நாடுமுழுவதும்
குலுங்கிடக் கைகொட்டிக்
கும்மியடி!

நம்மைப்பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று
கும்மியடி!''

இதை எழுதும்போது பாரதியார் சுப்புலக்ஷ்மியையே மனத்தில் வைத்துக் கொண்டு எழுதினாரோ என்று நினைக்கும்படி அவளுக்காகப் பெற்றுத் தரப்பட்ட விடுதலையையே துல்லியமாக வர்ணிப்பதாக அமைந்திருந்தது. அவளுடைய முயற்சியினால் அல்ல; அவளுடைய பெற்றோர், சித்தி இவர்களுடைய பொறுமையாலும், நெஞ்சுறுதியாலும், விடா முயற்சியாலும் கிடைத்த வெற்றி அது. ஆயிரக் கணக்கான, ஏன் கோடிக் கணக்கான பெண்கள், (கல்யாணமானவர்களும், ஆகப் போகிறவர்களும்) கனவிலும் காணமுடியாத சுதந்திரமாகும் அது.

சுப்புலக்ஷ்மி தன் அறையில் அமர்ந்தபடி கலங்கிய, அழுக்குடைய ஆனால் அழகான அந்தப் புண்ணிய நதியை இடப்புறமும், வலப்புறமுமாய்த் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தாள். தானிருக்கும் இடத்தையொட்டிஞற்போல் பாய்ந்து வருகின்ற வெள்ளப் பெருக்கினையும் பிறகு அதே நீரோட்டம் தன்னருகிலிருந்து பிரிந்து வெகு தூரம் சென்றுவிடுவதையும் காண்பாள். கடந்து சென்ற ஆண்டுகள், மாதங்கள், சமீபத்திய சில வாரங்களைப் பற்றியும், பிறகு எதிர் காலத்தில் இனி நடக்கப் போவதைப் பற்றியும் ஆலோசிப்பாள். இனி நடக்கப் போவதைப் பிறர் நிர்ணயிக்கப் போவதில்லை, அதைத் தனக்குத் தானேதான் வகுத்துக் கொள்ள வேண்டும் என்பதை ஏற்கனவே உணர ஆரம்பித்துவிட்டாள் அவள். கான்வென்டில் இரண்டாவதும், இறுதியுமான ஆண்டு முடிந்தவுடன், தன் தாயார் விரும்பியது போல வீட்டிலேயே இருந்து புத்தகங்கள் படித்துக்கொண்டு காலத்தைக் கழிக்க முடியாது. தன் கடைசி இரு தங்கைகள் படிக்க இருக்க, பெரிய தங்கைகள் இருவரும் குழந்தைகளைப் பெறவிருக்க, வீட்டோடு தான் இருந்தாலும் தன்னுடைய வாழ்க்கை சூன்யமாகவோ பயனற்றதாகவோ இருந்து விடாதுதான். இருந்தாலும் அது போதாது. தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் உள்ள பிற் காலத்தைப் பற்றி மட்டும் யோசித்துப் பயனில்லை. இன்னும் எத்தனை யெத்தனையோ பேர்களுடைய பிற்காலத்தைப் பற்றியும் அவளால் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை.

தன் மனக் கண் முன்னால் அடிக்கடி தோன்றிய அந்தக் குழந்தை விதவையை, தன் கனவுகளிலெல்லாம் இடம் பெற்றுத் தன்னைத் துன்புறுத்திய அதன் அழுகுரலை அவள் இப்போதும் நினைத்துக் கொண்டாள். எத்தனையோ நாட்களுக்கு முன்னால் மாமாவின் திருமணத்தை முன்னிட்டுத் தஞ்சை ஜில்லாவில் ஒரு கிராமத்துக்குப் போயிருந்த போது தான் பார்த்த காட்சியை அவளால் மறக்கவே முடியவில்லை. ஞானகியைப் போன்ற துர்ப்பாக்கியசாலிகள் இந்தியா முழுவதுமே கணக்கற்று இருந்தார்கள் என்பதை அவள் இப்போது நன்கு அறிந்திருந்தாள். அவளுடைய சிந்தனை சமீப காலத்துக்குத் தாவியது. கான்வென்டில் தன்னுடன் படித்த பெண்களைப் பற்றி நினைத்தாள். அவர்கள் ஆரோக்கியமும் ஆனந்தமும், தன்னம்பிக்கையும் கொண்டு ஒளிர்ந்தார்கள்.

குறிப்பாக அவர்களில் ஒருத்தியைப் பற்றி சுப்புலக்ஷ்மி இப்போது நினைவு கூர்ந்தாள்.

(தொடரும்)

செம்பாலான
அடிப்பாகம் கொண்ட
ஸ்டெயின்லெஸ்
ஸ்டீல் பாத்திரங்களில்
சுகாதார ரீதியாக
உங்கள் உணவைச்
சமையுங்கள்!



- உணவு காந்துவதோ, தீய்ந்து போவதோ இல்லை.
- சூடு சமசீராகப் பரவுகிறது.
- சுத்தம் செய்வதும், துப்புரவாக வைத்துக்கொள்வதும் சுலபம்—கழுவித் துடைத்தால் போதும்—வேறெதுவும் ...செய்யவேண்டியதில்லை!

செம்பாலான அடிப்பாகம் கொண்ட ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் சமைப்பதற்குச் சிறந்தவை.
மேலும், அவை ஆயுட்காலம் வரை நீடித்துழைக்கின்றன.

அவற்றை இன்றே வாங்குங்கள். அவற்றில் சமைப்பதே பேரானந்தம் அளிக்கும்...சுத்தம் செய்வதோ மிகவும் சுலபம்!

அவை உங்கள் வட்டாரத்தில் கிடைக்கவில்லையானால்,
தயாரிப்பாளர்களின் பிரதிநிதிக்கு எழுதுங்கள்:

மகாலக்ஷ்மி மெடல் இண்டஸ்ட்ரீஸ், 192 B, [illegible] ரோடு, பம்பாய்-4.

இந்த வியாபாரச் சின்னத்தைப் பார்த்து வாங்குங்கள் Meghdoot

LPE Aiyars I 3 TAM




## 51. அம்பிகையின் வாகனம்

போர்க்களத்தில் எதிர்த் தரப்பிலிருந்து படைகளை யெல்லாம் சிங்கமுகன் உதயகிரிக்கு உருட்டி விட்டான். இனி ஆறுமுகரும், இதுவரை போர்க்களம் வராத பூதப் படைகளும்தான் அவனோடு போருக்கு வரவேண்டும். ''சிவகுமாரன் எனக்குப் பயந்து ஓடி ஒளிவானா? அல்லது இவ்வளவு நடந்த பின்னும் தைரியமாகப் போருக்கு வருவானா? அந்தப் பாலகன் எங்குள்ளான்?'' என்று அண்டங்கள் வெடிக்கும்படி ஆரவாரம் செய்து கூறினான்.

ஓர் ஒற்றன் அவனிடம் வந்து, ''சிவகுமாரன் ஆயிரம் வெள்ளம் பூதப் படைகளுடனும், சேனைத் தலைவர்களுடனும், பிரம்மன் விஷ்ணு, இந்திரன் முதலியோருடனும் பாசறையில் இருக்கிறார்'' என்று கூறினான். அதைக் கேட்டு நகைத்த சிங்கமுகாசுரன், ''அவர்கள் இங்கு என்னை எதிர்க்க வருவர் என எதிர் பார்த்துக் காலதாமதம் செய்வதில் பொருள் இல்லை. பயந்து ஒளிந்திருக்கும் அந்தப் பாலகனையும் படையினரையும் இப்பொழுதே அவர்களது பாசறைக்குச் சென்று கொல்வேன்'' என்று கோஷித்தான். அவ்வாறே பாசறை நோக்கிப் போருக்குப் புறப்பட்டான்.

சிங்கமுகாசுரன் வருவதை யறிந்த தேவர்கள் வாட்டமடைந்து குமாரக் கடவுளிடம் நிகழ்ந்தவற்றை யெல்லாம் கூறினார்கள். பெருமான் புன்முறுவல் செய்தார். பாசறையினின்று வெளி வந்தார். தம்முடைய தேரைக் கொண்டு வரும்படி பணித்தார். அதன்படி வாயுதேவன் மனோ வேகத் தேரைக்கொண்டு வந்து நிறுத்தினான்.

''நாமே புறப்படுவோம்'' என்றார் சுவாமி.

சாம்பூநதம் என்ற பொன் ஆயிரம் மாற்றுத் தங்கம். அவற்றில் நவரத்தினக் கற்கள் பதிக்கப்பட்ட பாதுகைகளைச் சிருஷ்டி கர்த்தாவும், சரஸ்வதி காந்தனுமான பிரம்மதேவன் சரவணபவருக்குச் சமர்ப்பித்தார். அந்த இரத்தினப் பாதுகையின்மீது தமது இரத்தினத் திருவடி வைத்துப் புறப்பட்டார் சுவாமி. தேவேந்திரன் தங்கப் பிடி போட்ட வெண்சாமரம் வீசினான். முப்பத்து மூன்று கோடி தேவர்களும் ஆலவட்டம் வீசினார்கள். சூரியனும் சந்திரனும் வெண் கொற்றக்குடை பிடித்தார்கள். அறக் கடவுள் உடைவாள் ஏந்தி வந்தான். இயக்கர் தலைவனான குபேரன் தாம்பூலப் பெட்டி தாங்கினான். வருணன் படியகம் ஏந்தினான்.

இந்திரன் கவரி சாய்ப்ப
　　இமையவர் வட்டம் வீசச்
சந்திரன் தபனன் என்போர்
　　தன்னிழல் கவிப்புத் தாங்க
அந்தகன் உடைவாள் பற்ற
　　இயக்கர்கோன் அடைப்பை
　　　　　　　　　கொள்ளச்
சிந்துநீர் அரசன் செம்பொற்
　　படியகம் ஏந்தச் சென்ருன்.

சகல தேவர்களும் கைங்கரியம் செய்ய, சகல தேவர்க்கும் நாயக ரான சுவாமி மனே வேகத் தேரில் தமது மனேகரமான பாதம் பதித்து ஏறி விற்ருர். கடல்கள் நானும்படி ஆயிரம் வெள்ளம் பூதர்கள் ஆர வாரம் செய்து சூலம், மழு, தண்டம், எழு, மலை முதலியவற்றை ஏந்தி எம்பெருமானைச் சூழ்ந்து சென்ருர்கள். பானுகம்பன் என்ெருரு பூத வீரன். அவனுக்கு இரண்டாயிரம் கைகள்; இரண்டாயிரம் கால்கள். இரண்டா யிரம் கைகளிலும் இரண்டாயிரம் வலம் புரிச் சங்கங்களை எடுத்து வெற்றி ஊதினுனும்.

மூவர்கள் முதல்வன் வந்தான்;
　　முக்கணன் குமரன் வந்தான்;
மேவலர் மடங்கல் வந்தான்;
　　வேற்படை வீரன் வந்தான்;
ஏவருந் தெரிதல் தேற்ருது
　　இருந்திடும் ஒருவன் வந்தான்;
தேவர்கள் தேவன் வந்தான்;
　　என்றன சின்ன மெல்லாம்.

'' மும்மூர்த்திகளுக்கும் முதல்வன் வந்தான்; சிவகுமாரன் வந்தான் ; பகைவர்கள் என்னும் யானைகளுக்கு ஆண் சிங்கமாயுள்ளவன் வந்தான் ; வேற்படை வீரன் வந்தான்; யாவ ரும் அறிதற்கரிய தனி முதல்வனுகிய பெருமான் வந்தான்; தேவாதிதேவன் வந்தான்'' என்று திருச் சின்னங்கள் கட்டியம் ஒலிக்கச் சுவாமிநாதர் போர்க் களம் வந்தார்.

சிங்கமுகாசுரனும் படைகளோடு வந்து எதிர்த்தான்.

இருதிறப் படைகளும் போர் செய்த போது அவுணர் பலர் அழிந்தார்கள். அதனைக் கண்ட சிங்கமுகாசுரன் மிகப் பெரிய மாயாவுருவத்தை யெடுத்து, தேவர்கள் நடுநடுங்க வந்து இரண் டாயிரம் கரங்களால் ஆயிரம் வெள் ளம் பூத வீரர்களையும் எடுத்து விழுங்கி விட்டான். 'இனி நம்மையும் சிங்க முகாசுரன் விழுங்கி விடுவான்' என்று தேவர்கள் ஓடி ஒளிந்தார்கள். சிங்க முகாசுரனின் வயிற்றுக்குள் சென்ற பூதர்கள், ''இத்துணைக் காலமாகப் போரிலேயே ஈடுபட்டிருந்ததால் எம் பெருமானை அதிகம் ஸ்மரிக்க இயல வில்லை. சிவபெருமானைத் தியானிப்ப தற்கு மற்றைய இடங்களை விடச் சிங்கமுகாசுரனின் வயிறே ஏற்ற இடம்'' என்று இருந்து விட்டனர்.

இதுகாறும் வீரமகேந்திர புரத்துக்குத் தோல்விச் செய்தியே எடுத்துச் சென்ற தூதர்கள் சூரபன்மனிடம் ஓடிச் சென்றனர், இன்று வெற்றிப் பெருமை யுடன். சிங்கமுகாசுரன், வீரவாகு முதலிய இலக்கத்தொன்பதின்மரையும் ஆயிரம் வெள்ளம் பூதர்களையும் மாயத் தினுல் மயக்கி உதயகிரியில் வைத் திருப்பதையும், முருகனேடு வந்த ஆயிரம் வெள்ளம் பூதர்களையும் விழுங்கி விட்டதையும் கூறினர். ''இனி முருகன் அழிவான்'' என்று ஆர்ப்பரித்தனர்.

சூரபன்மன் மிகவும் மகிழ்ச்சி கொண்டான். அரியணையிலிருந்து இறங் கிச் சென்று தூதர்களை அன்புடன் தழுவிக் கொண்டான். அருகிலிருந்த ஏவலனை நோக்கி, ''ஊரிலுள்ள பல சேனைகளையும் திரட்டிச் சிங்கமுகனுக்கு உதவியாக அனுப்பு'' என்று ஆணை யிட்டான். பறையறிவிக்கப்பட்டது. மகேந்திரபுரியிலுள்ள சேன வீரர்கள் ஆரவாரத்துடன் அணிவகுத்துச் சிங்க முகாசுரன் நின்று கொண்டிருந்த போர்க்களத்தை யடைந்தனர்.

தன் தம்பியின் போர்த் திறத்தைத் தானே காண வேண்டும் என்று எண்ணிய சூரபன்மன் கோபுரத்தின் மீது ஏறி நின்று போர்க்களத்தை நோக்கினுன். முருகவேள் தனித்திருப் பதையும், தன் தம்பியின் வெற்றி யையும் கண்டு நகைத்தான். ஏக நாயகனுகிய சுவாமி ஏகாந்தமா யிருப்பதன் உட்பொருளை அவன் எப்படி அறிவான்?

சிங்கமுகாசுரன் பூத வீரர்களை விழுங்கியதைக் கண்ட முருகவேள் போர் செய்யும் திருவிளையாடலைப் புரிய வேண்டும் என்று திருவுளங் கொண்டார் ; முறுவல் பூத்துக் கொண்டே முன்னணிக்கு வந்தார். அவுண வீரர்கள் பெரும் ஆரவாரம் செய்து அவரைச் சூழ்ந்து பாணங்களை ஏவினுர்கள். குமாரக் கடவுள் வில்லை யெடுத்து நாணெலி செய்தார். அந்த 'டங்கார' நாதத்தைக் கேட்டே அவுண வீரர்கள் தங்கள் கைகளி லிருந்த ஆயுதங்களை நழுவ விட்ட னர். யானைகளும், குதிரைகளும் அவ் வொலியைக் கேட்டு வீழ்ந்தன. தேர்கள் அதிர்ந்து சிதறின. அதனைக் கண்டு வியந்த சிங்கமுகாசுரன் குமாரக் கடவுளின் திருமுன் வந்தான்.

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது

மேம்பாடடைந்த, புதிய

# ஸன்லைட்




மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்! ஒரு முறை வெள்ளோட்டம் பார்த்தீர்களானால் வெட்டவெளிச்சமாகத் தெரியும் அதன் மேன்மை! உண்மை, சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி. சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்றுகொழிக்கும் நுரை...தூய்மை ஓங்க வெளுத்து, ஒளி நிரக்க உதவும்! உங்கள் துணிகள் அனைத்துக்கும் உபயோகியுங்கள்: மேம்பாடடைந்த புதிய ஸன்லைட் சோப்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது**

**மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்**

லின்டாஸ்-S.60-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

கந்தவேளும் சிங்கமுகாசுரனும் இப்போதுதான் முதன் முதலில் சந்திக்கின்றனர். முதல் சந்திப்புக்கு எப்பொழுதும் பெருமை உண்டு.

"சுவாமி, சுவாமி என்று பேசப்படும் முருகன் சின்னக் குழந்தையாக அல்லவா இருக்கிறான்?" என்று தனக்குள் கூறிச் சிரித்துக் கொண்டான் சிங்கமுகாசுரன்.

சுவாமி பரம்பொருள் என்பது சிங்கமுகாசுரனுக்குத் தெரியும். ஆனாலும் போர்க்களம் அல்லவா? அறிவு மயங்கும். இது இறைவன் திருவிளையாடல். சிங்கமுகன் ஷண்முகரிடம் பேசலானான்:

**'கண்ணுதல் முதல்வன் மைந்த**
**கழறுவன் ஒன்று கேண்மோ**
**எண்ணலர் வலியை மாற்றல்**
**இறையவர் கடனே அற்றால்**
**விண்ணவர் தமைந் தண்டித்தோம்**
**அவர்க்குளும் அல்லை வேறோர்**
**நண்ணலன் எமருக் கில்லை**
**நடந்ததென் அமருக் கென்'றான்.**

"சிவகுமார! ஒரு விஷயம் சொல்கிறேன். கவனமாய்க் கேள். பிராமண தர்மம் வேறு; க்ஷத்திரிய தர்மம் வேறு. யார் என்ன சொன்னாலும் பொறுமையாக இருப்பவர் பிராமணர். க்ஷத்திரியரால் அப்படி இருக்க முடியாது; இருக்கவும் கூடாது. பகைவர்களை (எண்ணலர் — பகைவர்) அடக்கி ஒடுக்குவது ராஜ தர்மம். அந்த ராஜ தர்மத்தின்படி பகைவர்களை அடக்க வேண்டுமாதலால் நாங்கள் தேவர்களைச் சிறையில் வைத்தோம். அதிலே தவறு என்ன இருக்கிறது?

" எங்களுக்குப் பகைவர்கள் தேவர்கள். அந்தத் தேவர்கள் கூட்டத்தில் நீயும் ஒருவன் என்றால், அவர்கள் சார்பில் நீ வரலாம். ஆனால், நீ இந்தத் தேவர்கள் கூட்டத்தில் ஒருவன் அல்லவே? நீ விருப்பு வெறுப்பு இல்லாத சுவாமி என்கிறார்களே! நீ ஏன் போருக்கு வந்தாய்? கைலாயத்திலுள்ள சிவபெருமான் மீது கடுகளவும் எங்களுக்குப் பகைமை இல்லையே? எமதாற்றல் அவர் தந்ததேயன்றோ? அப்படியிருக்க, அவரது மைந்தனாகிய நீ எம்முடன் போருக்கு வந்த காரணம் யாது?" என்று கேட்டான் சிங்கமுகாசுரன். அவனது கேள்வியில் நியாயம் இருக்கிறது.

சுவாமி அதற்கு என்ன விடை சொல்கிறார் ?

**" உறைதரும் அளியன் தன்னை**
**வலியவன் ஒறுக்கின் நாடி**
**முறைகெழு தண்ட மாற்றி**
**அண்டங்கள் முழுவ தூக்கும்**
**இறையினைப் புரிதும் அற்றால்**
**நீவிர்கள் இமையோர்க் கிட்ட**
**சிறையினை அகற்ற வந்தேம்**
**செருவுமந் நிறத்துக் கெ"ன்றான்.**

ஒரு தந்தை. அவருக்கு இரண்டு பிள்ளைகள். மூத்த பிள்ளைக்கு எலும்புருக்கி வியாதி. இளையவன் 'கொழு, கொழு'வென்றிருக்கிறான். பொழுது விடிந்ததும் இளைய பிள்ளை பணியாரப் பாத்திரத்தை எடுத்து வைத்துக் கொண்டு உண்ணத் தொடங்குகிறான். "பல் விளக்காமல் உண்ணலாகாதடா" என்கிறான் எலும்புருக்கிப் பிள்ளை.

"இப்படித்தான் செய்வேன். நீ யோசனை ஒன்றும் சொல்லத் தேவையில்லை" என்று விதண்டை கூறுகிறான் இளையபிள்ளை.

"இரு; இரு! அப்பாவிடம் சொல்கிறேன்" என்று எழுந்து போனான் எலும்புருக்கிப் பிள்ளை.

"அப்பாவிடமா சொல்லுவாய் ?" என்று அண்ணனைக் கீழே தள்ளி முதுகில் குத்தினான் இளையவன். 'அப்பா அப்பா!' என்று அலறினான் மூத்த பிள்ளை. இந்த அழுகுரல் தந்தைக்கு எட்டியது. தந்தை வந்து பார்த்தார். இளையவன் மூத்தவனை அடித்துக் கொண்டிருந்தான்.

தந்தைக்கு இரண்டு பேரும் பிள்ளைகள்தானே? இளையவன் மூத்த பிள்ளையை அடித்தால் அடிக்கட்டும் என்று விட்டு விடலாமா? "அண்ணனை அடிக்கலாமா?" என்று இளையவனைச் சினந்து கேட்டார்.

"அடித்தால் என்ன?" என்று கேட்டது இளையபிள்ளை.

"அடித்தால் வலிக்கும்" என்றார் தந்தை.

"வலித்தால் என்ன?" என்று கேட்டது இளையபிள்ளை.

" என்னவா ? இதோ புரிந்து கொள்" என்று அவன் முதுகிலேயே தந்தை அடித்தார். அப்படி அடித்ததினால்தான் வலியைப் புரிந்து கொண்டான் இளையபிள்ளை; தவற்றையும் விட்டான்.

கந்தப் பெருமான் சிங்கமுகாசுரனுக்கு இந்த நீதியைத்தான் சொன்னார். "சிங்கமுகாசுரனே! நீங்கள் பரம சாதுக்களான தேவர்களுக்குத் துன்பம் செய்தபடியினால் இந்தப் போர் வந்திருக்கிறது. எளியவரை வலியவர் ஒறுத்ததால் வலியவரை நீதி முறைப்படி தண்டித்து அறத்தை நிலைநிறுத்த வந்திருக்கிறோம்" என்று அருளினார்.

முருகவேள் கூறியதைக் கேட்ட சிங்கமுகாசுரன் சிரித்தான். போர்க்

களம் செய்த சதி அது. சிங்கமுகனும் நீதி உணர்விழந்தான். 'தேவர்கள் ஏமாற்றுகிறார்கள். அவர்கள் எங்கள் மீது நேரடியாகப் போர் செய்ய முடியாது. அப்படிப்பட்டவர்கள் எங்களுடன் போர் செய்யச் சிவபெருமானை அழைத்து வந்திருக்கலாம். அவரை அழைத்து வந்திருந்தால் எங்களுக்கு எவ்வளவோ கௌரவமாக இருந்திருக்கும். நீ சிறு குழந்தை. உன்னைக் கொன்று விட்டால் உமாதேவியார் வருத்தப்படுவார்கள். எனவே, உன்னைக் கொல்ல விரும்பவில்லை. நீ போய் விளையாடிக் கொண்டிரு'' என்றான்.

குகப் பெருமான் வாயால் மறுமொழி சொல்லவில்லை. அநாயாசமாக ஒரு பாணத்தை விடுத்தார். அந்த மலை போன்ற வடிவம் கொண்டிருந்த சிங்கமுகாசுரன் மார்பில் அப்பாணம் புகுந்து முதுகில் ஊடுருவிச் சென்றது. உதிர வெள்ளம் பெருகியது. ஒரு விநாடி முன் இறுமாப்புடன் பேசிய அவுணன் பெருந்துன்பமடைந்து கலங்கினான். பாணம் ஊடுருவிச் சென்றதால், மார்பும் முதுகும் வாயில்களைப் போல் பிளக்க, அவனது வயிற்றில் அடக்கமாயிருந்த பூத வீரர்கள் அவ்வழியே குதித்து வெளிப்பட முயன்றனர். சிங்கமுகாசுரன், அவர்கள் வழியைப் பத்துக் கைகளால் மூடிக் கொண்டு கந்தவேள் மீது ஒரு தண்டத்தை எடுத்து வீசினான். முருகக் கடவுள் நொடிப் பொழுதில் நான்கு பாணங்களால் அவன் நெற்றியைத் துளைத்தார். சிங்கமுகாசுரன் மூர்ச்சித்தான். தனது வயிற்றில் தோன்றிய வாயிலை அடைத்துக் கொண்டிருந்த அவனது கரங்கள் நழுவின. உடனே பூதர்கள் அனைவரும் வெளிப்பட்டு முருகவேளைச் சூழ்ந்து கொண்டனர். திருவருள் இருக்க இறந்த பூதர்கள் உய்ந்ததில் அதிசயமென்ன ?

மாயப் படையால் உதயகிரியில் அடைக்கப்பட்டிருந்த வீரவாகுதேவரையும், மற்றப் படைத் தலைவர்களையும் அழைக்க வேண்டும் என்று திருவுளம் கொண்ட முருகப் பெருமான் மீண்டும் ஒரு பாணத்தை ஏவினார். அந்தப் பாணம் உதயகிரியில் சென்று மாயா பாசத்தை அறுத்து, வீரவாகுதேவர் முதலியோர்க்கு உணர்வு தந்து, புட்பக விமானம் போலாகி அவர்களை ஏற்றிக் கொண்டு வந்து முருகவேள் திருமுன் விடுத்தது. எல்லோரும் இளம்பூரணரது திருவடிகளை வணங்கி வாழ்த்தினார்கள். மறைந்தவர் யாவரும் வருவது கண்டு சிங்கமுகன் ஆசாபங்கமும் ஆத்திரமும் கொண்டான்.

இதற்குள் குமாரக் கடவுளின் நாணொலி கேட்டுச் சோர்வுற்று மயங்கி வீழ்ந்த அவுண சேனைகள் மயக்கம் தெளிந்து விரைந்து போர் புரிய வந்தன. அவர்கள் கோபத்துடன் படைக்கலங்களை வீசிக் கொண்டு முருகப் பெருமானைச் சூழ்ந்து கொண்டனர். குமரவேள் புன்முறுவல் பூத்துக் கோடி கோடி பாணங்களை விடுத்தார். அவர் விடுத்த பாணங்களில் சில அக்கினியையொத்தன; சில நஞ்சையொத்தன; சில இருளையொத்தன; சில பாம்புகளையொத்தன; சில கூற்றுவனையொத்தன; சில சூலத்தையொத்தன; சில அறத்தை நிறுவியதால் பிரம்மதேவரையொத்தன; சில உலகங்களை ரட்சித்ததால் திருமாலையொத்தன; சில அவுணர்களை அழித்ததால் உருத்திரனையொத்தன.

அறத்தை நல்கலின் அந்தணன்
போல்வன; அலத்
திறத்தை அன்பொடு போற்றலில்
செங்கண்மால் போல்வ
ஒறுத்து மன்னுயிர் உண்குறும்
அவுணரை ஒருங்கே
இறுத்தல் செய்திடுந் தன்மையால்
ஈசனே போல்வ

முருகவேள் விடுத்த அனந்த கோடி பாணங்கள் கணப் பொழுதுக்குள் அவுண சேனைகள் அனைத்தையும் அழித்தன. சிங்கமுகாசுரன் தனித்தவனாயி

**காரும் வெடியும் — 1965 மாடல்**



ஞன். அவன் முன்பு கொண்டிருந்த மாய வடிவம் முருகவேளின் பாணத்தினுல் அழிந்தது. ஆகவே, பழைய வடிவத்துடன் தேரின் மேல் நின்ருன்.

தன்னுடைய படைக் கலங்கள் முருகப் பெருமானிடம் பயனற்றுப் போனதைக் கண்ட சிங்கமுகாசுரன் இரண்டாயிரம் கைகளாலும் கந்த வேளைப் பிடித்து விடலாம் என்று கோபத்துடன் பாய்ந்து வந்தான். அந்தக் கரங்களை யெல்லாம் கணைகளால் அறுத்துத் தள்ளினுர் சுவாமி. வெட்டுண்ட அந்தக் கரங்கள் தரையில் விழுவதற்கு முன்பே வேறு கரங்கள் முளைத்தன. நிலத்தில் விழுந்த கைகளை முளைத்த கைகளால் எடுத்துக் கொண்டு போருக்கு வந்தான் சிங்கமுகாசுரன். பெருமான் அவனது ஆயிரம் தலைகளையும், இரண்டாயிரம் கரங்களையும் அறுத்தார். அவை மீண்டும் முளைத்தன. இப்படியாக முருகப் பெருமான் சிரங்களையும் கரங்களையும் அறுக்க அறுக்க அவை முளைத்துக் கொண்டேயிருந்தன. ''சிங்கமுகன் யாகாக்கினியில் சிரங்களை அறுத்து ஆகுதி செய்த பலனுல் நான் அறுந்த சிரங்களும் கரங்களும் மீண்டும் மீண்டும் முளைக்கின்றன'' என்று முருகப் பெருமான் எண்ணினுர்.

சிங்கமுகாசுரன் ஆரவாரத்துடன் சிரித்தான். ''முருகனே! இப்போதாவது தெரிகிறதா? எத்தனை முறை கரங்களையும், சிரங்களையும் அறுத்தாய் ? எத்தனை முறை அவை முளைக்கின்றன? இவை யெல்லாம் உன் தந்தை கொடுத்த வரத்தின் பலம். கோடி முறை அறுத்தாலும் அவை முளைத்துக் கொண்டேயிருக்கும். ஆகவே, என்னைக் கொல்ல உன்னுல் முடியாது. நீ புத்திசாலிப் பிள்ளையாயின் போர்க் களத்திலின்று உடனே புறப்பட்டுச் செல்'' என்ருன்.

''சிங்கமுகனே! இவ்வளவு நேரம் உன்னுடன் நான் போர் செய்ததாக நினைக்கிருயா? எனது தந்தை உனக்கு அளித்த வரங்களின் பெருமையைத் தேவர்களுக்குக் காட்டினேன். அவ்வளவுதான். அப்பனே, இதுகாறும் விளையாடினேன்; இனி சமர் புரிவோம்'' என்ருர் முருகப் பெருமான்.

கந்தவேள் கூறியதைக் கேட்ட சிங்கமுகாசுரன் இடிபோல் ஆர்த்தான்; மலைகளைப் பெயர்த்து வீசினுன். அந்த மலைகளைத் தூள் தூளாக்கிய சுவாமி அவனது மார்பில் ஆயிரம் பாணங்களைச் செலுத்தினுர். அதனுல் அவனது மார்பு பிளந்தது.

ஷண்முகநாதன் கூறுவார் : ''சிங்கமுகனே! இப்பொழுது ஒரு பாணம் விடுகிறேன். உன் சிரங்களும் கரங்களும் முளைக்கின்றனவா என்று பார்'' என்று ஓர் அஸ்திரம் விடுத்தார். அந்த அஸ்திரம் தலையும் இரு கைகளும் தவிர ஏனைய சிரங்களையும் கரங்களையும் ஒரே வீச்சில் அறுத்துத் தள்ளியது. சிங்கமுகாசுரனின் வெட்டுண்ட தலைகளும் கைகளும் மீண்டும் முளைக்க ஆரம்பித்ததைக் கண்ட பெருமான், ''ஊம்'' என்று உரப்ப, அவை அக்கணமே உள்ளே புகுந்து ஒளிந்தன.

''சிவபெருமான் தந்த வரத்தை மாற்றி விட்டார் முருகன். அதை யார் எதிர்க்க முடியும்? சிவன் வேறு; முருகன் வேறு அல்ல. இனி முருகன் நம்மைக் கொன்று விடுவார்'' என்று முடிவு செய்து கொண்டான் சிங்கமுகன்.

''முருகா! நீ வேல் ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு என்னைக் கொல்ல நினைக்கிருய். வேலைத் தவிர வேறு ஆயுதத்தினுல் என்னைக் கொல்ல முடியுமா?'' என்று கேட்டான் சிங்கமுகாசுரன். அவர் புல்லை ஏவினுலும் புவனம் முழுதும் அழிந்து விடும் என்பதை மறந்து பேசினுன்.

சுவாமியின் வலது கையில் குலிசாயுதம் இருந்தது. இடக்கையில் இருப்பது வேலாகிய சக்தியாயுதம். அந்தக் குலிசாயுதத்தைப் பிரயோகம் செய்தார். அவ்வாயுதம் விரைந்து சென்று புஜபல பராக்கிரமனும், அறிவாளியாயிருந்தும் அறிவை உறவுக்காக முறித்துக் கொண்டவனுமான சிங்கமுகாசுரனைப் பூப்பறிப்பது போல் லகுவாகக் கொன்றது. கங்கையில் நீராடி அசுர ரத்தத்தின் மாசுகளைக் களைந்து, கந்தன் கைக்குத் திரும்பி வந்தது.

பிரமாதி தேவர்கள் ஆரவாரம் செய்து ஆனந்தக் கூத்தாடினர்; பூமழை பொழிந்தனர்.

சிங்கமுகாசுரன் இறக்கவில்லை. அவனை இறக்கச் செய்வது கருணை மூர்த்தியின் கருத்தல்ல. அவனைத் திருத்துவதே அவரது திருத்தொழில். சிங்கமுகாசுரன் சிம்ம வாகனமாகப் பராசக்திக்குத் தொண்டு செய்ய அனுப்பி வைத்தார் சுவாமி. தேவிக்கு என்றுமே தர்ம ஸ்வரூபமான சிம்ம வாகனமுண்டு. அதனுள் சிங்கமுகனும் ஐக்கியமாகி அம்பிகையின் திவ்விய ஸ்பரிசத்தைப் பெற்ருன் என்பதே தாத்பரியம். வதம் செய்தாலும் அது இதமாக முடிவதை நம் புராணங்களில்தான் காணலாம்.

முருகப் பெருமான் அனைவருக்கும் அருள் செய்து வீரவாகுதேவரோடும் பாசறை திரும்பிப் பொற் பீடத்தில் எழுந்தருளினுர். (தொடரும்)



சென்னை, க்வாரி காண்ட்ராக்டர் ஸ்ரீ Y. குப்புசாமி அய்யர் அவர்கள் குமாரத்தி சௌ. **ஸ்வர்ண கௌரிக்கும்**, ஈரோடு, சார்ட்டர்ட் அக்கௌண்டண்ட் ஸ்ரீ V. R. கணபதி அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **G. ஜானகிராமன்**, B.D.S. அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு நண்பர்களும், உறவினர்களும் நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள்!


சண்முகம் தர்மராஜனுடன் உரை யாடிக் கொண்டிருக்கும் போது சற்று வேறு பக்கம் திரும்பிய போது...
சண்முகம்... உஷார்! துப்பாக்கி......


இவன் பேசும் போது தாடை அசைவில் காதருகிலே இயற்கைக்கு மாறான சுருக்கங்கள் விழுவதைக் கண்டு சந்தேகப்பட்டேன். அவசரத்தில் முகமூடியைச் சரியாகப் பொருத்திக் கொள்ளவில்லை. ..பாவம்....!


இதற்குள் நீரினுள் மூழ்கிய சேகர் ரோஜாவை மீட்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான்


சேகர், அந்தப் பெண்ணிற்கு உயிர் இருக்கிறதா?
இறந்திருக்கக் கூடாது என்று தான் கொண்டிருக்கிறேன்.
அவளை இப் படித் தூக்கிச் – சுமந்துகிறேன்.


தலையில் ஆழமான காயம். பலமான அடி. ... ஆமாம் தர்மராஜன் தான். ஓ எங்கே? அது யார்? அங்கு யாரைக் கட்டிப் போட்டிருக்கிறீர்கள்?


இதோ நாம் – தேடி வந்த தர்மராஜன். இதன் கதையை உண்மைத் தர்மராஜன் தான் நமக்குச் சொல்ல வேண்டும்!

தொடரும்

# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர்

**இதமான நறுமணம் கொண்டது**
**புத்துணர்ச்சி அளிக்கிறது**
**வியர்வையை உறிஞ்சுகிறது**




ஸ்நானத்திற்குப் பின் அனுபவமாகும் புத்துணர்ச்சி நீடித்து நிற்க, நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழ, பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள். இதமான வாசனையுள்ள இந்த டால்கம் பவுடர் வியர்வையை விரைவில் உறிஞ்சி, எல்லாக் காலநிலைகளிலும், உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும் மனோ உல்லாசத்துடனும் வைக்கும். பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் குடும்பத்தினர் அனைவருக்கும் ஏற்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

**யாவரும் வாங்கக்கூடிய**
**உயர்தர டால்க்**

# அண்ணா சுகர்னோ

"எந்தச் சட்ட திட்டங்களோ பார்வைமென்டோ எதுவும் கட்டுப்படுத்தாது. நான் எல்லாவற்றுக்கும் புறம்பானவன். நான் யார் சொல்லையும் கேட்டு நடக்க வேண்டியதில்லை" என்று சில வாரங்களுக்கு முன்னர் தான் இந்தோனேசிய ஜனாதிபதி டாக்டர் சுகர்னோ கூறினார்.

இப்போதெல்லாம் அரசியல் நிகழ்ச்சிகளோ, யுத்த 'அல்டிமேட்டம்'களோ மணிக் கணக்குக் கெடுவில்தானே பிரஸ்தாபிக்கப்பட்டு வருகின்றன. இந்த முறையை ஒட்டி, அவர் தம்மைப் பற்றி இப்படிப் பறையறைந்து கொண்ட நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குள்ளாகவே, அவரது பதவி, உயிர் இரண்டுக்குமே ஆபத்து விளைந்திருக்கக் கூடிய நிலைமை அவரது நாட்டில் ஏற்பட்டது எனலாம். அந்த நிலைமை மாறி இப்போது கொஞ்சம் அமைதி உருவாகி வருகிறது.

இந்தோனேசிய ஜனாதிபதி டாக்டர் அஹ்மத் சுகர்னோ ஒரு தனிப் பிறவி. பாலித் தீவைச் சேர்ந்த ஓர் உயர்தர வகுப்பு மாதுக்கும், ஜாவாவிலிருந்த ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயருக்கும் பிறந்தவர். ஒரு கலப்பு மணப் பிறவி. அவர் பிறக்கும்போதே ஒரு தேசாபிமானியாகவே பிறந்தார் என்றும் சொல்ல வேண்டும்.

ஜாவா, சுமத்திரா, போர்னியோ முதலிய தீவுகளடங்கிய 'கிழக்கிந்தியத் தீவுகள்' எனப்பட்ட பிரதேசம் டச்சுக்காரர்களின் ஆட்சியில் இருந்து வந்தது. சுகர்னோ தேச விடுதலைப் போராட்ட இயக்கத்தைத் தோற்றுவிக்க பெரும் தலைவர்களுடன் சிறு வயதிலேயே தொடர்பு கொண்டார்.

அவர் லிவில் இன்ஜினீயரிங் பரீட்சைக்குப் படித்து வந்தார். மாணவனாயிருந்து கொண்டே 'பீமா' என்ற புனைபெயரில் காரசாரமான அரசியல் கட்டுரைகள் எழுதி வெளியிட்டு வந்தார்.

அவர் படிப்பு முடிந்ததும் சிவில் இஞ்சினீயர் பட்டம் பெற்றதும் அரசியல் போராட்டத்தில் மற்றவர்களைப் போல் சாதாரணமாகப் பிரவேசிக்கவில்லை. அவரது சுபாவப்படி அதில் பொத்தென்று குதித்தார்!

அவர் ஒரு முதல்தரமான பிரசங்கி. சாதாரண மனிதனது எண்ணங்கள், நம்பிக்கைகள், அபிலாஷைகள் முதலியவற்றை அவனுக்காக, அவனுக்குப் புரியும் பாஷையில் உணர்ச்சி பொங்கச் செய்யும் முறையில் எடுத்துக் கூறுவார். அவரது குரல் சமயத்துக்கேற்றவாறு நெருப்பைக் கக்கும்; சாந்தமானதாக இருக்கும்; பசப்புவதாக இருக்கும். இவரது பிரசங்கத்தைக் கேட்கும் பல இலட்சக்கணக்கான மக்கள் தாங்கள் நிற்கும் இடத்தில், மனோவசியம் செய்யப்பட்டவர்கள் போன்று சிலையாய் நின்று கொண்டிருப்பார்கள்.

ஒரு சமயம், அமெரிக்கத் தூதரான ஹௌவர்ட் ஜோன்ஸ் சுகர்னோவின் பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்த போது தம்மையும் மறந்து மற்ற இந்தோனேசிய மக்களுடன் சேர்ந்து 'மர்டேக்கா' என்று கோஷமிட்டாராம்.

'மர்டேக்கா' என்றால் 'சுதந்திரம்' என்று அர்த்தம். இது போன்ற கோடி வார்த்தைகளையும், சொற்றொடர்களையும் கற்பனை செய்வதில் சுகர்னோ நிபுணர்.

'ஒரே தேசம், ஒரே கொடி, ஒரே மக்கள்' என்பது அவர் கண்டுபிடித்த புகழ்பெற்ற கோஷம். "ஒரு முறை சுதந்திரம் பெற்றவர்கள் எப்போதும் சுதந்திரம் பெற்றவர்களே" என்பது இன்னொரு கோஷம்.

இவற்றை மக்கள் மந்திரங்களைப் போல் ஜபிப்பார்கள்.

தங்கள் ஆதிக்கத்தில் உள்ள நாடுகளைச் சுரண்டுவதிலோ, அல்லது நாட்டு மக்களுக்குச் சுதந்திரம் கொடுக்க மறுத்து, சுதந்திரப் போராட்டங்களைக் கொடுமையான அடக்கு முறைகளால் நசுக்குவதிலோ டச்சுக்காரர்கள், பிரிட்டிஷ்காரர்களுக்குத் தோற்றவர்களல்ல.

சுகர்னோ நீண்ட காலம் சிறைப்பட்டிருந்தார். அவரும் அவரது சகாக்களும் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களுக்குட்பட்டு டச்சுக்காரர்களிடமிருந்து சுதந்திரத்தைப் பிடுங்கிக் கொண்டது ஒரு தனிப்பட்ட சரித்திரமாகும்.



டாக்டர் அஹ்மத் சுகர்னோ

கிழக்கிந்தியத் தீவுகள் "இந்தோனேசியக் குடியரசு" என்ற பெயருடன் சுதந்திர நாடாயிற்று. டாக்டர் சுகர்னோவே அதன் முதல் தலைவரானார்.

இந்தோனேசியாவில் சாதாரணமாக இருபது, இருபத்தைந்து அரசியல் கட்சிகள் உண்டு. சுகர்னோ, எல்லாக் கட்சியினரையும் திருப்திப்படுத்தும் முறையில் அவர்கள் பிரதிநிதிகளைப் பதவிகளில் இருத்துவதில் நிபுணர்.

மந்திரி சபை, அவை அமைக்கப்பட்ட மூப்பது நாட்களிலும், ஐம்பது நாட்களிலு மாக விழுந்து கொண்டே இருக்கும். ஆனால் அவர், தாம் மட்டும் பதவியிலிருந்து கொண்டு புதிய மந்திரி சபைகளை அமைப்பார். 1963ம் ஆண்டில் அவர் உயிர் உள்ளவரைக்கும் ஜனாதிபதியாகத் தம்மைத் தாமே நியமித்துக் கொண்டு விட்டார்.

ஆறு ஜாஜுபாருவான போர்வீரத் தோற்ற முள்ள சுகர்ணோ பல மொழிகளை அறிந்த வர். சித்திரங்கள் எழுதத் தெரிந்தவர். அவர் பல உயர்தர ஓவியங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்.

அவருக்குக் காந்திஜியின் கொள்கைகளில் ஓரளவு ஈடுபாடு உண்டு. அவர் எழுதுவது பேசுவதெல்லாம் கவனமாகப் படித்து வந்தார். அவரது வாசகசாலையில் மகாத்மா காந்தியின் நூல்கள் எல்லாம் இருக்கின்றன.

காந்திய வாசனைதான் அவரை இந்தோனேசிய சுதந்திரம் ஏற்படுவதற்கு முன்னரேயே 1945ம் ஆண்டில் 'பஞ்சசீலம்' என்ற புகழ் பெற்ற அந்த ஐந்து கொள்கைகளையும் பற்றிப் பேசச் செய்திருக்க வேண்டும். அந்தக் கொள்கைகள்தாம் இந்தோனேசியக் குடியரசின் மூலக் கொள்கைகளாக அமைந்தன.

ஜனாதிபதி சுகர்ணோ, குடியரசின் ஆரம்ப காலத்தில் தம் தேசம், தம் மக்கள் விஷயத்தில் மட்டும் சிரத்தை கொண்டு அவர்களது நல்வாழ்வுக்காகப் பாடுபட்டு வந்தார்.

நாளடைவில் அவரது மனப் போக்கே மாறி விட்டது. பதவி மோகமும், அதிகார வெறியும் தலைக்கேறின. அவர் கேவலம் இந்தோனேசிய ஜனாதிபதியாக மட்டுமே இருந்து கொண்டிருக்க விரும்பவில்லை. உலகத் தலைவர்களுள் ஒருவராக விளங்க விரும்பினார். சுற்றுப்புறத்திலுள்ள மலாயா, பிலிப்பைன்ஸ், தாய்லாந்து போன்ற நாடுகள் இந்தோனேசியத் தலைமையை ஏற்க வேண்டு மென்று பேராசைப்பட்டார்.

அவர் தம்மைச் செயற்கை முறையில் பெரிய தலைவராக்கிக் கொண்டார். அவர் தாமே தமக்குச் சூட்டிக் கொண்ட பட்டங்கள் வருமாறு : 'இந்தோனேசியக் கிளர்ச்சியின் மாபெரும் தலைவர்', இந்தோனேசிய முஸ்லிம் இயக்கத்தின் மகத்தான பாதுகாவலன், மாபெரும் கல்வி ஆசான், மாபெரும் நிர்மாண நிபுணன், மாபெரும் அரசாங்க நிர்வாகி, மாபெரும் செம்படவன்.

அவர் சுகபோக வாழ்க்கையிலும் பெண்களைச் சுற்றி அலைவதிலும் ஈடுபட்டார். நாட்டுக்காகத் தாம் எத்தனையோ சிரமங்கள் பட்டு எத்தனையோ தியாகங்கள் புரிந்திருப்பதால் இப்படியெல்லாம் இப்போது வாழத் தாம் உரிமை பெற்றிருப்பதாக அறிவித்தார்.

அவர், பண்டைய இந்துமகா சமுத்திரத்தின் பெயரையே மாற்றுவதாக இருக்கிறார். அதற்கு 'இந்தோனேசிய மகாசமுத்திரம்' என்று பெயரிடப் போகிறாராம்!

அவர் மலேயா தேசம், 'மலேசியா' என்ற கூட்டு தேசத்தை ஏற்படுத்துவதை ஆட்சேபித்தார். அதற்காக 'மலேசியாவை நசுக்கு' என்ற கோஷத்தை ஆரம்பித்தார். '11-1-65ந் தேதி காலை சூரியோதயத்துக்கு முன்னர் மலேசியா நசுக்கப்படும்' என்று உலகமறியக் கூறினார். ஆனால் அப்படி ஒன்றும் நடைபெறவில்லை.

இந்தக் கோஷங்கள் ஏதாவது கிளம்பும் போது இந்தோனேசியாவிலுள்ள அன்னிய நாட்டு வாசகசாலைகள், தூதராலயம் இவற்றில் உள்ள மரச் சாமான்கள், பத்திரங்கள் முதலியவற்றுக்கு ஆபத்து ஏற்படும். அவை தீக்கிரையாக்கப்படும். இவையெல்லாம் மக்கள் உணர்ச்சி வசப்பட்டுத் தங்கள் வறுமையையும் பிற கஷ்டங்களையும் மறப்பதற்காகச் சுகர்ணோ கையாளும் தந்திரங்கள் என்று கருதப்படுகின்றன.

ஐக்கிய நாட்டுச் சங்கத்தின் உதவியினால் தான் அவர் நாடு சுதந்திரம் பெற முடிந்தது: இப்போது அதிலிருந்து விலகிக்கொண்டு விட்டார். இந்தோனேசியாவின் சுதந்திரத்தை ஆதரித்து ஐ. நா.வில் பேசியது இந்தியாதான். உலக யுத்த முடிவில் பிரிட்டன் இந்தோனேஷியாவுக்குள் புகுந்த போது பல இந்தியப் போர் வீரர்கள், தங்கள் படையை விட்டுச் சுகர்ணோவோடு சேர்ந்து கொண்டனர். இப்போது அவர் இந்தியாவுக்கு விரோதியாகவும், பாகிஸ்தானின் நண்பனாகவும் இருக்கிறார். ரஷ்யா தான் அவருக்குப் போர்க் கருவிகளைக் கொடுத்துதவியது: ஆனால் சுகர்ணோ ஆதரிப்பது சீனாவை.

சுகர்ணோ ஒரு விதத்தில் அதிர்ஷ்டமுள்ளவராக இருந்து வந்திருக்கிறார் என்று சொல்ல வேண்டும். அவரைக் கொல்வதற்காக ஐந்து முறைகள் தீவிர முயற்சிகள் செய்யப்பட்டன. ஐந்து முறையும் அவர் கொலைகாரனின் துப்பாக்கிக் குண்டினின்றும் தப்பித்துக் கொண்டார்.

இப்போது இந்தோனேஷியாவில் நடக்கும் உள்நாட்டுப் போருக்குக் காரணம், சில கம்யூனிஸ்ட் சேனைத் தலைவர்கள் ஜனாதிபதியையும், கம்யூனிஸ்டுகளின் விரோதியான தற்காப்பு மந்திரி நாஸ்டியானையும் கைது செய்து கொலை செய்ய முயன்றதுதான். ஆனால் இந்த நாடகத்துக்கு ஏற்பாடு செய்தது டாக்டர் சுகர்ணோவேதான் என்று சிலர் சந்தேகப்படுகிறார்கள். எப்படியானாலும் தமது தலையைச் சாமர்த்தியமாகக் காப்பாற்றிக் கொண்ட பிறகு தமக்கு வேண்டாதவர்கள் சிலரை ஒழித்துக் கட்ட அவருக்கு இந்தச் சந்தர்ப்பம் நன்கு பயன்பட்டிருக்கும். இன்னும் பலவாறாகவும் இந்தப் புரட்சிக்குக் காரணங்கள் கூறப்படுகின்றன.

பங்கு சுகர்ணோ என்றும் அண்ணா சுகர்ணோ என்று அர்த்தம்.

அண்ணாவின் சுயசரிதத்தை சின்டி ஆடம்ஸ் என்ற அமெரிக்க மாது எழுதி வருகிறார். அதில் சுகர்ணோ, ''எனது சமாதிக்கல்லில் 'பங்கு சுகர்ணோ இந்தோனேசிய மக்களுக்காகப் பரிந்து பேசியவர்' என்று பொறித்தால் போதும்'' என்று எழுதியிருக்கிறாராம். அத்துடன் அவர் காலத்தில் இவ்வுலகில் வாழ்ந்த அரசியல் தலைவர்களுள் மிகப் பெரிய 'சபலிஸ்ட்' இவர்தான் என்றும் பொறித்து வைக்கலாம்!

—என். ஆர்.

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில் ஈறுகளைப் பலப்படுத்துகிறது என்று




வேறு எந்த டூத் பேஸ்ட்டிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை. குழந்தைகள் அதன் இனிய பெப்பர்மிண்ட் வாசனையை விரும்புகின்றனர்.




பணத்தை மிச்சப்படுத்துங்கள்—
பெரிய எகனாமி
சைஸை வாங்குங்கள்!

CTPA. G. 11 TAM

# பல்சுவைப் பக்கங்கள்



## இந்திக்கு ஒரு துவாரம்

சர் ஐசாக் நியூட்டன் பூனை ஒன்றை வளர்த்து வந்தார். அந்தப் பூனை அவருடைய அறையிலேயேதான் எப்போதும் இருக்கும். அது சில சமயம் இரவில் எங்காவது வெளியே போயிருந்தால் அது திரும்பவும் அறைக்குள் வருவதற்காகக் கதவைத் திறந்து வைத்துவிட்டு நியூட்டன் உறங்கி விடுவார். கதவு திறந்து கிடப்பதைக் கண்ட வேலைக்காரி விவரமறிந்து பூனை நுழையும் அளவுக்குக் கதவில் ஒரு துவாரம் செய்து கதவைச் சாத்தி வைத்து விட்டாள்; பூனை அந்த வழியே உள்ளே வருவதற்காக. கதவில் ஓட்டை விழுந்ததால் நியூட்டனுக்கு வருத்தம்.



சில நாட்கள் கழித்துக் கதவில் அந்தத் துவாரத்துக்குப் பக்கத்தில் ஒரு சிறிய துவாரம் காணப்பட்டது. அதைக் கண்ட வேலைக்காரி நியூட்டனை நோக்கி, 'அந்தச் சிறிய துவாரம் எதற்கு?' என வினவினாள். அதற்கு நியூட்டன், 'பூனை குட்டி போட்டிருக்கிறது. எனவே பூனைக்குட்டி போவதற்கு ஒரு துவாரம்' என்றாராம் வேடிக்கையும் பரிகாசமுமாக.

பூனையே நுழைந்து செல்லும் ஓட்டை வழியே குட்டியால் நுழைய முடியாதா என்ன? அதற்கு ஒரு தனி வழி வேண்டுமா? உலக முழுதுக்கும் தொடர்பு மொழியாக ஆங்கிலம் இருக்க, நமக்கு என்று இந்தி மொழி வேண்டுமா?

*இப்படி முழக்கமிட்டவர்:* **இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. எம். எல். ஏ.**

*முழங்கிய இடம்:* **திருச்சி தேவர் மன்றம், இந்தி எதிர்ப்பு மகாநாடு.**

*தகவல் அனுப்பியவர்:* **திருப்புகலூர். முல்லைவழுதி.**

## அனுமதி

உலகத்தில் சென்று பிறக்க வேண்டுமென இரு தேவர்கள் பிரம்மதேவரிடம் உத்தரவு கேட்டார்கள். ''அதற்கு உங்களிடம் உள்ள தகுதி என்ன?'' என்று பிரம்மதேவர் கேட்டார்.

ஒருவர், ''எனக்கு நன்றாக உழைக்கத் தெரியும்!'' என்றார்.

மற்றவர், ''நன்றாக எனக்குப் பிழைக்கத் தெரியும்!'' என்றார்.

இருவரது விடைகளையும் கேட்ட படைப்புக் கடவுள், ''பிழைக்கத் தெரிந்தவர் மட்டுமே உலகுக்குச் செல்லுங்கள்!'' என்று உத்தரவு போட்டு விட்டுப் பேசாமல் போய் விட்டார்!

— **தமிழ்முகன்**

## இரண்டு பொய்யர்கள்!

ராணுவத்திலிருந்த ஒரு சிப்பாய் தன் மேல் அதிகாரி மேஜரிடம் சென்று முறைப்படி ஸல்யூட் அடித்து விறைப்பாக நின்றான்.

மேஜர் பதிலுக்கு ஸல்யூட் செய்துவிட்டு, 'என்ன சமாசாரம்?' என்று கேட்டார்.

'என் மனைவிக்கு இது பிள்ளைப்பேறு காலம். இந்தச் சமயத்தில் நான் அவளுடன் இருந்தால் அவளுக்கு மிகவும் தைரியமாயிருக்கும்; அவளை சமயத்தில் பிரசவ ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று அனுமதிக்கச் சௌகரியமாகவும் இருக்கும். எனக்கு ஒரு மாதம் லீவு வேண்டும்' என்றான் சிப்பாய்.



'உனக்கு உதவி செய்ய முடியாமல் இருக்கிறதே என்று மிகவும் வருந்துகிறேன். உன் மனைவி எனக்கு எழுதிய கடிதத்தில் தனக்குப் பிரசவ சமயத்தில் உதவ அவள் தாயாரும் தம்பியும் வந்திருப்பதாகவும், ஆகவே உனக்கு லீவு கொடுத்து அனுப்ப வேண்டாமென்றும் எழுதியிருக்கிறாள். ஆதலால் உன் லீவு விண்ணப்பத்தை ரத்து செய்து விட்டேன்...' என்றார்.

சிப்பாய் மறுபடியும் ஒரு ஸல்யூட் அடித்து விட்டுத் திரும்பினான். கதவருகில் சென்றதும், மறுபடி திரும்பி மேஜரை நோக்கி, 'நம் ராணுவப் பிரிவில் இரண்டு முழுப் பொய்யர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் நான். எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லை.....!' என்றான்.

## மகா தைரியசாலி

வேகமாகச் சென்று கொண்டிருந்த ஒரு கப்பலின் மேல் தட்டில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது காற்று மிகவும் வேகமாக வீசியது. கைப்பிடி வேலியில் சாய்ந்த அந்தப் பெண் ஒரு நிமிஷ நேரத்தில் நிலைகுலைந்து அலை கடலில் விழுந்து விட்டாள். உடனே ஒரு கிழ உருவம் கடலை நோக்கிப் பாய்ந்தது. இருவரும் 'லைப் போட்' மூலம் தப்பிப் பிழைத்தார்கள்.



தம் உயிரையும் பொருட்படுத்தாமல் அந்தப் பெண்ணைக் காப்பாற்றிய கிழவரைக் கப்பலில் உள்ளவர்கள் அனைவரும் பாராட்டினார்கள். அது மட்டுமா? அவருக்கு ஒரு விருந்து நடத்தி வைபவமாகக் கொண்டாடினார்கள். கடைசியில் அவரைச் சில வார்த்தைகள் பேசும்படி மேடைக்கு அழைத்தார்கள்.

கிழவர் மெதுவாக எழுந்து எல்லாரையும் சுற்றிப் பார்த்துவிட்டு மேடைக்குச் சென்றார். பிறகு, 'நான் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறேன். அதாவது, என்னைப் பிடித்துக் கப்பலிலிருந்து யார் சமுத்திரத்தில் தள்ளியது?' என்று கேட்டார்.

## சின்ன உடம்பில்... ...பெரிய மூளை!



ஒரு பையன் பதினொரு வயதிலேயே கவிதை எழுதத் தொடங்கிவிட்டான். அப்புறம் கவிதைக்காக ஒரு பத்திரிகையும் நடத்த ஆரம்பித்து விட்டான்!

கரடுமுரடான எதுகைகளை வைத்துப் பாடும்படி கவியரங்குகளில் சொல்லப்படும். இன்ன இன்ன வார்த்தைகளை இப்படி இப்படி வைத்துப் பாட வேண்டுமென்றும் நிபந்தனைகள் விதிக்கப்படும்.

இம்மாதிரியான கவியரங்குகளுக்கு அந்தப் பையன் போவான். நிபந்தனைகளின்படி பாட்டுப் பாடிக் காட்டுவான். பரிசைத் தட்டிக் கொண்டு போவான்!

இந்தச் சிறு பையனா இவ்வளவு கடினங்களையும் கடந்து வெற்றி பெறுகிறான்! இவனால் முடியுமா? யாரோ மறைவாக இருந்து பையனுக்குப் பெருமை உண்டாக்குகிறார்கள் போலும்... இல்லாவிடில் இந்தப் பையன் கவி பாட முடியாது!... என்று எண்ணினார் ஒரு பெரிய கவி. அவர் பெயர் நாதிர்கான். எப்படியும் பையனின் குட்டு அம்பலமாகும் என எதிர்பார்த்தார்.

அந்நிலையில் ஒரு நாள் —

ஒரு புத்தகக் கடையில் கவி பாடும் பையன் புத்தகங்களைப் புரட்டுவதைக் கண்டார் கவிஞர் நாதிர்கான். பையனின் கவித்துவ சக்தியை இங்கே அறிந்து விடலாம் என்று எண்ணி, உடனே அந்தப் புத்தகக் கடைக்குள் நுழைந்துவிட்டார்.

'ஏ, பையா! கவியரங்குகளில் நீ பல கவிதைகள் சொல்லக் கேட்டிருக்கிறேன். உனக்கு உண்மையிலேயே கவி இயற்றும் சக்தி இருக்குமானால் இப்போது அதைக் காட்டு. பார்க்கலாம்.

'ஜாத் நஹேரா, ஷாத் நஹேரா, அபாத் நஹேரா—

'இவைகளை வைத்துப் பாடி பார்க்கலாம்' என்று சவால் விட்டார். பையன் விழிக்கப் போகிறான் என எதிர்பார்த்தார்.

அந்த வாலிபன் சற்றுக் கோபமடைந்தானும் கடை வீதியில் நாலு பேர் முன்னிலையில் இப்படிக் கேட்டுவிட்டாரே என்று ரோசம் பிறந்தது.

அவ்வளவுதான். அந்த ரோச உணர்ச்சியே சக்தியைத் தூண்டி விட்டது. சடசடவென்று கவிதையைப் பொழிந்து தள்ளினான்.

இதைக் கேட்ட கவி பிரமித்துப் போனார்.

அதே வாலிபன் 1904ம் ஆண்டு லாகூரில் 'சமயத்துக்கும் பகுத்தறிவு ஆதாரம்' என்ற பொருளில் பேச வந்திருந்தபோது யாரோ ஒரு பெரியவர் பேசப் போகிறார் என எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில் இளைஞன் மேடை ஏறினான். வெகு நுணுக்கமான விஷயங்களையும் விடாமல், குர்ஆனிலும், மற்ற மத நூல்களிலும் உள்ள உண்மைகளைப் பேசி முடித்தான்.

அனைவரும் வியப்புற்றார்கள்.

ஹஸ்ரேத் அலி என்ற உருதுப் புலவர் 'சின்ன உடம்பில் பெரிய மூளை' என்று பாராட்டினார்.

தன் இளமைப் பருவத்தில் பலரைத் திகைக்க வைத்தவர் வேறு யாருமல்ல.

பாரத நாட்டுக் கல்வி மந்திரியாக இருந்து காலமான மௌலானா அபுல் கலாம் ஆசாத் அவர்கள்தான்!

ஆதாரம்: 'விளையும் பயிர்' கி.வா.ஜ. எழுதியது.
தகவல்: ஏ. சுவாமிநாதன்

## உங்களுக்குத் தெரியுமா?




'நத்தை வேகம்' என்று சொல்லக் கேள்விப் பட்டிருக்கிறோம். நத்தையின் வேகத்தை பிரிட்டனில் கணக்கெடுத்திருக்கிறார்கள்... நத்தையின் குறைந்தபட்ச வேகம் மணிக்கு 23 அங்குலம்! அதிகபட்ச வேகம் மணிக்கு 55 கெஜம்!

உலகத்தில் உள்ள 8600 ஜீவராசிகளில் மிகச் சிறியது 'பேட்டும்டேர்லிங்' என்ற ஒரு பூச்சி. இதன் நீளம் எவ்வளவு தெரியுமா? ஓர் அங்குலத்தில் 1/128 பாகம்! ஓர் ஊசியின் துவாரம் வழியாக இது மிகச் சுலபத்தில் போய் விடுமாம்!

உலகத்தில் உள்ள மீன்களில் மிகப் பெரியது 1929ம் வருடம் கேப்டவுனுக்குப் பக்கத்தில் பிடிக்கப்பட்ட 'வேல் ஷார்க்' என்ற ஒரு வகை மீன்தான்! இதன் நீளம் 45 அடி. எடை 60 டன். பிலிப்பைன் தீவுக்குப் பக்கத்திலிருக்கும் 'கோபி' என்ற ஒரு வகை மீன்தான், மிகச் சிறியது. இதன் நீளம் ஒன்பது மில்லி மீட்டர். எடை ஆறு மில்லி கிராம். 'ப்ளோரிடா'வுக்கு அருகில் இருக்கும் 'ஸ்வார்ட்' என்ற ஒரு வகை மீன்தான் மிக வேகமாக நீந்தக் கூடியது. மணிக்கு 68 மைல் வேகம்!

தகவல்: ராமச்சந்திரன்





## மயிலாப்பூர்

இயேசுநாதரின் மாணவருள் ஒருவரான தாமஸ் அடிகள் சேர நாட்டிலிருந்து மயிலைக்கு வந்து ஒரு கோவிலை அமைத்துத் தம் சமயத்தைப் பரப்பினார் என்பது கிறித்தவர் பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து கூறி வரும் செய்தியாகும். கி. பி. 140ல் இந்தியக் கடற்கரையைப் பார்வையிட்ட தாலமி என்னும் மேலை நாட்டு வழிப்போக்கன் மயிலையை ''மைலார்பன்'' என்று குறித்துள்ளார்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் காலத்தில் மயிலையில் சிவன் கோவில் ஒன்று இருந்தது என்பது அவர் பாடலால் தெரிகிறது. மயிலை அக்காலத்தில் மயிலார்ப்பு எனப் பெயர் பெற்றிருந்தது என்பதும் உயர்ந்த மாடங்களை உடைய தெருக்களைப் பெற்றிருந்தது என்பதும் ''மங்குல் மதிதவழும் மாட வீதி மயிலார்ப்பு'' என்னும் தொடரால் அறியப்படும்.

— டாக்டர் மா. இராசமாணிக்கனார் — (சமயக் கலை மலர் — திருமயிலைக் கபாலீசுரத்தின் பிரசுரம்)



### கௌரவக் கழுதை

''போடா கழுதை!'' என்று யாரையாவது சொல்லி விட்டால் போதும், மறுகணம் நம் கன்னத்தில் 'பளார்' என்று அறை விழும். ஆனால் கழுதை என்று கூறினால் உயர்வாக மதிக்கக் கூடியவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் விரும்புவது அரேபியாவில் தான்! தகவல்: முகுந்த ஜார் சுந்தர்.




## நூல்களின் நீளம் மைல் கணக்கு

பிரிட்டிஷ் மியூஸியத்தில் எவ்வளவு புத்தகங்கள் இருக்கின்றன என்பதை இதுவரையில் கணக்கெடுத்து முடியவில்லை. சுமார் ஐம்பது லட்சம் நூல்கள் இருக்கும் என்கிறார்கள். அவற்றை வைத்திருக்கும் அலமாரிகளை ஒரே வரிசையில் வைத்துக் கொண்டு போனால் அறுபது மைல் தூரம் வரையில் நீண்டு கொண்டு போகும்.

1931ல் புத்தகப் பட்டியல் தயாரிக்க ஆரம்பித்தார்கள். இருபத்து மூன்று ஆண்டுகள் தொடர்ந்து முனைந்து முயன்று பார்த்த பிறகு பட்டியல் பூர்த்தியாக ஐம்பத்திரண்டு ஆண்டுகளாவது ஆகும் என்ற முடிவுக்கு வந்தார்கள். இப்போது இருக்கிற நிலையைப் பார்த்தால், புத்தகப் பட்டியலை முடிப்பது 2036ம் ஆண்டின் முடிவில்தான் சாத்தியம் என்கிறார்கள்.

## நியூயார்க்கில் நடந்தது!



1936-37ல் நடந்தது. வேலை வெட்டி ஒன்றுமில்லாமல் வீட்டில் தூங்கி வழிந்த அமெரிக்கர் அநேகருக்கு அரசாங்கம் வாராவாரம் நிவாரண செக்குகள் அனுப்பி வந்த காலம். திடீரென்று ஒரு நாள் நியூயார்க் நகர தபால் நிலையத்தின் முன்பு ஒரு போராட்டம் நடந்தது. அதை நடத்தியவர்கள் நிவாரண செக்குகள் பெற்று வந்த முழுச் சோம்பேறிகள். காரணம்: செக்குகளைக் கொண்டு வந்த தபால்காரர்கள் காலை ஏழரை மணிக்கு வந்து தொலைத்து கதவைத் தட்டித் தூக்கத்தைக் கெடுத்தார்களாம்! பத்து மணிக்கு முன்னால் தபால்காரர்கள் தங்கள் வீட்டுப் பக்கம் தலை காட்டக் கூடாது என்பதே அவர்களது கோரிக்கை! — என். ஸ்ரீநிவாஸ்






# காதல் இல்லையேல் காதல்

'சோ'



★——— முன்கதைச் சுருக்கம்

**க**ல்லூரி வாழ்க்கையைப் போல் மகிழ்ச்சிகரமான வாழ்க்கை வேறில்லை யல்லவா? அதுவும் கல்லூரி மாணவனான நாகராஜனுக்கு அதிர்ஷ்டம் அவன் மேல் நினைக்கப்பட்டபோது அவன் திக்குமுக்காடித் தான் போகிறான் 'கவிதை என்றால் விலை என்ன விலை?' என்று கேட்கும் நாகராஜனை அவனது நண்பர்கள் பகீரதப் பிரயத்தனம் செய்து கவிதை எழுத வைத்தது அவனுக்குக் குருட்டு அதிர்ஷ்டத்தையல்லவா கொண்டு சேர்த்து விடுகிறது? யாரும் எதிர்பார்க்காமலே நாகராஜனின் தமிழ்க் கவிதைக்கு முதல் பரிசு கிடைக்கிறது. அவன் சாமர்த்தியத்தினால் அல்ல; வந்தது ஒரே கவிதை; தம் மானம் கப்பலேறக் கூடாது என்று தமிழ்ப் பேராசிரியர் அந்தக் கவிதைக்குப் புது வியாக்கியானம் செய்து அதற்குப் பரிசைக் கொடுத்துத் தொலைக்கிறார்! அதுவும் நாகராஜனுக்கு எத்தனை இடைஞ்சலாகப் போய் விட்டது! அவனுக்குப் பெருமையும், புகழும் கிடைத்தால் பரவாயில்லை. கல்லூரி மாணவி மாலதியின் காதலையும் அல்லவா கவிதை கொண்டு வந்து சேர்த்து விடுகிறது! முதல் கவிதையையே திக்கு முக்காடி எழுதிய நாகராஜனை அடுத்த கவிதை இயற்றித் தரும்படி அவனது கல்லூரிக் காதலி வேண்டுகிறாள். வேறு யார் வேண்டினாலும் நாகராஜன் மறுத்திருப்பான். தன் உள்ளங்கவர்ந்த காதலி கேட்கும் போது அவனால் என்ன செய்ய முடியும்? கதாநாயகன் நாகராஜன் அதைப் பணியை உடனே நிறைவேற்ற முனைந்ததில் என்ன அதிசயம்? பாட்டும் பிறக்கிறது; அவர்கள் காதலும் வளர்கிறது; அவர்கள் காதல் வளர்ந்து கொண்டே போய்க் கல்யாணத்தில் முடிந்தால் சுவாரசியம் என்ன இருக்கிறது?

அவர்கள் கல்யாணத்துக்குக் குறுக்குச்சுவர் எழுப்புகிறார் மாலதியின் சித்தப்பா கனகசபை. பெரும் பணக்காரர் ஒருவர் தனக்குத் தூரத்து உறவினர் என்று நாகராஜன் விளம்பவே அந்த அன்நிரத்துக்கு மயங்கி விடுகிறார் கனகசபை. ஆனால் வெண்ணெய் திரண்டுவரும் வேளையிலே தாழி உடைந்த கதையாக நாகராஜனின் தூரத்து உறவினர் மண்டையைப் போட்டு அவனுக்குத் தலைவேதனையையும் பிரச்னையையும் ஏற்படுத்தி விடுகிறார். வேதாளம் முருங்கை மரம் ஏறிக் கொண்ட கதையாகக் கனகசபை சொத்தில்லாத நாகராஜனுக்கு மாலதியை மணம் முடித்து வைக்க மறுத்து விடுகிறார். மாலதியும் நாகராஜனும் அவரைக் கெஞ்சவே அவர் மரத்திலிருந்து சிறிது இறங்கி 'இரண்டு மாதங்களில் நாகராஜன் பத்தாயிரம் ரூபாய் எப்படியாவது சம்பாதித்துக் கொண்டு வரவேண்டும். வெறும் வேத்து வேட்டுக்கு என் மகளை மணம் முடித்துத் தர மாட்டேன்!' என்று கூறுகிறார். நாகராஜன் பத்தாயிரம் ரூபாய் பணத்துக்கு எங்கே போவான்? அவனுக்கு ஆபத்பாந்தவனாக நண்பன் சுரேஷ்—பம்பாய் பத்திரிகை ரிப்போர்டர்—உதவியாக புரிய வருகிறான். 'பம்பாய்ப் பிரமுகர் சபேசன் கலைஞர்களை ஆதரிக்கும் நவீன பாரி வள்ளல். அவரை அணுகி உதவி கேட்கிறேன்!' என்று நண்பன் சுரேஷ் சொல்கிறான். அந்த நவீன பாரி ஒரு புதிய வெடி குண்டைத் தூக்கிப் போடுகிறார்! 'கலைஞன் உயிரோடு இருக்கும் போது உதவி புரிவது நல்ல தல்ல; அந்தக் கலைஞன் மறைந்தால் அவன் குடும்பத்துக்குப் பண உதவி புரிய முன் வருகிறேன்' என்று பகர்கிறார் அந்த நவீன பாரிவள்ளல்! அதற்கு மேல் இருநண்பர்களான நாகராஜனும் சுரேஷும் இந்தப் பிரமுகரிடமிருந்து பணம் கறக்கப் பல வழிகளை யோசிக்கிறார்கள். கடைசியில் சுரேஷ் ஒரு புதிய யோசனையை உதிர்க்கிறான்; 'நாகராஜன் செத்துப் போனதாகப் பத்திரிகைகளில் பிரபலப்படுத்திப் பிறகு நாகராஜனே இரட்டையர்களில் ஒருவனாக, தம்பி தியாகராஜனாக வந்து விட்டால் இந்தப் பிரச்னைக்கு முடிவு காண முடியும்' என்கிறான். இந்த ஏமாற்று வேலைத்துக்கு இணங்கினால் தான் ஜெயிலுக்குப் போக நேரிடுமே என்று கதிகலங்குகிறான் நாகராஜன்.

இவ்விரு நண்பர்களும் செய்யும் முடிவு என்ன என்பதை மேலே தொடர்ந்து படியுங்கள்:

*சுரே: இன்னிக்குப் பம்பாய்ப் பிரமுகர் சபேசனை எப்படிடா நிதி விஷயமா மீட் பண்ண முடியும்? இன்னும் இரண்டு நாட்கள் கழிச்சு நீ செத்துப்போன செய்தியைப் பேப்பர்லே பப்ளிஷ் பண்ணிட்டு, ஒரு மீட்டிங் ஏற்பாடு பண்ணிட்டு, அப்புறம்தானே அவரைச் சந்திக்கணும். இரண்டு நாள் பொறுத்துக்க.*

*நாக: நீ சொல்றதும் வாஸ்தவம்தான்... டேய், சுரேஷ், நியூஸ் எப்படிடா பப்ளிஷ் பண்ணப் போறே?*

சுரே: "திடீர் மரணம்! பிரபல இளம் கவிஞர் நாகராஜன் மாரடைப்பினால் திடீர் மரணமடைந்தார்."

நாக: இரு. இரு. மிகப் பிரபல, அழகான, இளம் கவிஞர் நாகராஜன்னு போடேண்டா.

சுரே: அழகான கவிஞர்னு போடணுமா?

நாக: போட்டா என்ன?

சுரே: ஒண்ணுமில்லே. கூடவே உன் போட்டோவை வேறே போடப்போறேனே? அப்ப எப்படித் தைரியமா அழகான கவிஞர்னு போடறது?

நாக: ஏண்டா, என் அழகுக்கென்ன? என் அழகைப் பார்த்து என்னே ஒரு பெண்-மாலதி-'லவ்' பண்ணியிருக்காளேடா? உன் முகத்தைப் பார்த்து யாராவது 'லவ்' பண்ணியிருக்காளா?

சுரே: என் காதலி என் முகத்தையே இன்னும் பார்க்கலே...

நாக: உன் காதலியா?

சுரே: ஆமாண்டா... உன்கிட்ட எப்படிச் சொல்றதுன்னு தயங்கிக்கிட்டு இருந்தேன்.

நாக: அடப் பாவி! என்னைப் பத்தி யெல்லாம் தெரிஞ்சுக்கிட்டு, நீமட்டும் ஒண்ணும் சொல்லாம பேசாம இருந்திருக்கே இல்லே?

சுரே: எனக்கு வெட்கமா இருந்துதுடா.

நாக: உனக்கு ஏதுடா வெட்கம்?...... யாருடா அவ?

சுரே: அதானே தெரியலே!

நாக: காதலி யாருன்னே தெரியலையா?

சுரே: டேய் நாகு, அவ பேரைத் தெரியாது. அவளைத் தெரியும்.... ஐ மீன் பார்த்திருக்கேன்.

நாக: அடிக்கடி மீட் பண்ணியிருக்கியா?

சுரே: ஒரே ஒரு தடவைதான் அவளைப் பார்த்திருக்கேன்.

நாக: அதுக்குள்ளே காதலா?

சுரே: கண்டதும் காதல். அவ என்னைப் பார்க்கலே. பார்த்திருந்தா அவளுக்கும் கண்டதும் காதல் வந்திருக்கும்.

நாக: அவ எங்கே இருக்கான்னாவது தெரியுமா?

சுரே: இங்கேதான். பம்பாயிலே இருக்கா. சீக்கிரமா மீட் பண்ணி, பேசிக் கல்யாணத்தை முடிக்கணும். நீ கல்யாணத்துக்குக் கண்டிப்பா வரணும்.

நாக: எப்போ முகூர்த்தம்?

சுரே: அவளைக் கேட்டுச் சொல்லிடறேன். அவ சௌகரியத்தையும் பார்க்க வேணும்?

நாக: உனக்குத் திமிர்டா. இன்னும் அவளோட பேசினதுகூட இல்லே—முகூர்த்தத்துக்குத் தேதி நிச்சயம் பண்ணப் போறியே?

சுரே: ஏன் என்ன தப்பு?

நாக: அவ கல்யாணத்துக்கு ஒத்துக்க வேண்டாமா?

சுரே: என் பர்ஸனாலிடியைப் பார்த்தப்புறம் அவளாலே முடியாதுன்னு சொல்லிட முடியுமா?

நாக: ஏன், பயந்து போயிடுவாளா?

சுரே: நாகு, உனக்குத் தெரியாது. அவகிட்ட வேறே யாராவது முந்திக்கிறதுக்கு முன்னாலே நான் அவளைக் காதலிக்கிறேன்னு சொல்லிட்டாப் போதும். அவளும் என்னைக் காதலிக்க ஆரம்பிச்சுடுவா! உன்னை மாலதி எப்படிக் காதலிச்சா? நீதான் அவளை முதலே கேட்டிருப்பே. அதனாலேதான் அவளுக்கு உன்மேலே 'லவ்' வந்துடுத்து.

நாக: காதலினுடைய மதிப்பையே குறைவா எடை போடறே நீ.

சுரே: இல்லே. கரெக்டா புரிஞ்சுக்கிட்டிருக்கேன். ஆணும் சரி, பெண்ணும் சரி, தன்னை மதிக்க யார் முதல்லே காதல்னு உணர்றாங்களோ அவங்களையே நம்ப ஆரம்பிச்சுடறாங்க! அதுதான் காதல். ஒரு பெண்கிட்ட ஒரு ஆண், "நான் உன்னைக் காதலிக்கிறேன்"னு சொல்லிட்டான்னு போதும். 'யாருமே மதிக்காத நம்மையே ஒருத்தன் மதிக்கிறான்னு, அவனுக்கு நம்ம மேலே எவ்வளவு மதிப்பு இருக்கணும்'னு நெனச்சு அவ மயங்கிப் போயிடறா! உடனே காதல் தான்! காதலில் வெற்றிக்கு வேண்டியது அசட்டுத் துணிச்சல் ஒண்ணுதான் — அது எங்கிட்ட தாராளமா இருக்கு! எனக்குக் கவலையே யில்லே!

நாக: பாவம் அந்தப் பொண்ணு!

## காட்சி — 16

[சௌபாத்தி கடற்கரை பம்பாய். காட்சி வர்ணனை: வர்ணிக்க என்ன இருக்கிறது? சுரேஷும் நாகராஜனும் ஒரு ஸ்கூட்டரில் வந்து இறங்குகிறார்கள்.]

சுரே: டேய் நாகு, அதோ பார்டா! அது தாண்டா அவளுடைய கார். கிட்ட வரட்டும். காரை நிறுத்தி எப்படியாவது சிநேகிதம் பிடிச்சுடறேன்!

நாகு: டேய்! ஜாக்கிரதைடா....

சுரே: டேய் நாகு! நீ வேணுமானு பாரு—அவளோட பேசி, அவ கார்லேயே ஒரு ரௌண்ட் போயிட்டு வரேன் பாரு!

நாகு: சும்மா பேசுடா! ஒண்ணும் நடக்காது!

சுரே: பந்தயம்?

நாகு: பத்து ரூபா!

சுரே: உனக்குப் பத்தாயிரம் ரூபாய் கிடைக்கிறப்போ பத்து கழிச்சுக்கிட்டுத்தான் கொடுப்பேன்!

நாகு: பார்க்கலாம்!

[அப்போது ஒரு பியட் காரில் ஒரு யுவதியும் நடுத்தர வயதான மனிதரும் சென்று கொண்டிருக்க, அந்தக் காரைச் சுரேஷ் கையைக் காட்டி நிறுத்துகிறான். அந்த மனிதர் ஸ்தூல சரீரம் படைத்த சுகவாசியாகக் காணப்படுகிறார். அந்த யுவதியோ ஒடிந்து விழுகிறார்போல் இருக்கிறாள். உதட்டிலே சாயம், தலையிலே கொண்டை, கையில் டம்பப் பை நவநாகரிகமே உருவெடுத்து வந்ததுபோல் காட்சி யளிக்கிறாள். காரை ஓட்டுவது அவள்தான். சுரேஷ் கை காட்டுவது கண்டு காரை நிறுத்துகிறாள்.]

சுரே (அவர்கள் காரை நெருங்கி): எக்ஸ்க்யூஸ் மீ......

பெண்: இட் ஈஸ் ஆல் ரைட். வாட் டு யூ வாண்ட்?

சுரே: ஒண்ணுமில்லே.....

பெண்: அப்புறம் வண்டியை நிறுத்தினீங்க?

சுரே: அய்யோ! என்ன அழகா தமிழ் பேசறீங்க!

பெண்: மிஸ்டர்!

சுரே: சுரேஷ்..... மை நேம் ஈஸ் சுரேஷ்...

# மக்ளீன்ஸ் பற்பசையின் புதிய புல்லரிக்கும் ருசியே சொல்லும் உங்களுக்கு, அது செயலாற்றுகிறதென்று!

## சுத்தமாக்க
–உங்கள் பற்களிலிருந்து அந்த மங்கிய மஞ்சள் திரையைப் போக்குகிறது

## வெண்மையாக்க
–அவைகளுக்கு அந்த அதிகமான வெண்மையைத் தருகிறது

## காக்க
–சொத்தைக்குக் காரணமான கிருமிகளை நீக்கி உங்கள் வாயைப் புத்துணர்ச்சியுடன் சுத்தமாக வைக்கிறது.




**மக்ளீன்ஸ்–அதிவெண்மையான பற்களுக்கு**

MTP/1/P/1/65 TM.



நிர்: அவரு எங்கப்பா — டாடி! மிஸ்டர் நாதன்.

சுரேஷ்: இதோ பாருங்க மிஸ்டர் நாதன்.. நான் பத்திரிகை ஆபீஸிலே வேலை பார்க்கிறேன். நான் ஒரு ரிப்போர்ட்டர் !

நிர்மலா: ஓ! நியூஸ் பேப்பர் மேன் !

சுரே: நல்ல வேளை. நியூஸ் பேப்பர் பாய்னு சொல்லாம இருந்தீங்களே. நான் பத்திரிகை விக்கிறதில்லே!

நிர்மலா (கலகலவெனச் சிரிக்கிறாள்): ஹைஹலா !

சுரேஷ்: ஹி.....ஹி......!

நாதன்: சரி.....நீ ஒரு ரிப்போர்ட்டர். அதுக்கு எங்க காரை ஏன் நிறுத்தினே ?

சுரே: எங்க பத்திரிகையிலே ஒரு புதுப் பகுதி ஆரம்பிக்கப் போறோம். 'பம்பாயில் எனது கார் அநுபவம்' என்ற பகுதி..... பம்பாயிலே கார் ஓட்டறவங்க லெ பேரை மீட் பண்ணி, அவங்க அநுபவத்தைக் கேட்டுப் பிரசுரிக்கலாம்னு ஐடியா. அதுக்காகத்தான்.

நிர்: ஐஸீ!..... லெரி குட்! போட்டோ போடுவீங்களா?

கரே: கண்டிப்பா !

நிர்: இண்டர்வ்யூ எங்கே வெச்சுக்கலாம்? இங்கேயேயா.... வீட்டுலேயா?

கரே : இங்கே ஆரம்பிச்சுக்கலாம். வீட்டுலே போய் மத்ததைக் கவனிச்சுக்க லாம். உடனே ஆரம்பிச்சுடறதுதான் நல்லது.

நாதன்: நீ தப்பு பண்றேப்பா. இங்கேயே இண்டர்வ்யூவை முடிச்சுக்க..... சரி கேள்வி யைக் கேளு. பதில் சொல்றேன்.

கரே: நீங்களா பதில் சொல்லப் போறீங்க?

நாத: ஆமாம்! பின்னே என் காரா பதில் சொல்லும்?

கரே: அதில்லே..... இவங்க....

நாத: அவ இப்பதானே ட்ரைவ் பண்ண ஆரம்பிச்சிருக்கா.... என்ன பெரிய அநுபவம் இருக்கப் போறது?..... என் போட்டோ காப்பி வேணுமா?

கரே: நீங்களே வெச்சுக்குங்க! என்ன ஸார், நீங்க? இது பெண்கள் பகுதிக்காக, நடத்தற பேட்டி ! இதிலே உங்க அபிப் பிராயத்தை எப்படிப் போடறது?

நாத: ஓ! பெண்கள் பகுதியா? ஆமாம், உன் பேப்பர் பேரென்ன?

கரே: 'பம்பாய்த் தமிழன்' !

நாத: ஓ!.... ஆமாம், அதுலே பெண்கள் பகுதின்னே ஒண்ணும் கிடையாதே !

கரேஷ்: இனிமேல்தான் ஆரம்பிக்கப் போறோம்.

நாத: இத்தனை நாட்கள் இல்லாம, இப்ப என்ன?

கரே: எங்க பத்திரிகையை ஆண்கள் ரொம்பப் பேர் படிக்க மாட்டேங்கிறாங்க. அதுக்காகத்தான் இந்தப் புதுப் பகுதி. பெண்கள் பகுதி இருந்தா, அதைப் படிக்கிற துக்குன்னே ஆண்கள் நிறையப் பேர் வாங்கு வாங்க.....

நிர்: ஹஹ்ஹா!.... ஹஹ்ஹா !

கரேஷ் : (திகைத்து நிற்கிறான்)

நாத: என்ன அவளை அப்படிப் பார்க்கிறே! ஒண்ணுமில்லே! அவ சிரிச்சா — அவ்வளவு தான் ! நதிங் சீரியஸ் !

கரே: நான் பயந்து போயிட்டேன்!..... உம் இண்டர்வ்யூ ஆரம்பிக்கலாமா?

நிர்: நான் ரெடி மிஸ்டர் கரேஷ் !

கரே: நீங்க எத்தனை வருஷமா கார் ஓட்டறீங்க ?

நிர்: இப்பத்தான் ஆறு மாசமா!

கரே: லைஸென்ஸ் இருக்கா ?

நாத: நீ ரிப்போர்ட்டரா, இல்லே போலீஸ் கான்ஸ்டபிளா?

கரே: இல்லே ஸார்..... ஒரு வேளை 'எல்' போர்டா இருந்தா.....

நிர்: மிஸ்டர்! நான் முதல்லே கார் ஓட்ரச்சேயே லைஸென்ஸோட ஓட்ட ஆரம்பிச்சேன்.

கரே: அது எப்படி?

நிர்: எங்க மாமாவுக்குப் பிரண்ட் இங்கே போலீஸ் டிபார்ட்மெண்டிலே இருக்கார் !

கரே: அப்போ சரி!.... ஆமாம்...., கார் ஓட்ட உங்களுக்குப் பயமாக இல்லையா?

நிர்: நான் எதற்குப் பயப்படணும்?

நாத: அதானே? பயப்படத்தான் தெரு விலே நடந்து போறவங்க இருக்காங்களே!

நிர்: நீங்க பேசாமல் இருங்க டாடி !

நாத: ஐ ஆம் ஸாரி!

கரே: இது வரைக்கும் எத்தனை விபத்துகள் நடந்திருக்கு ?

நாத: வீட்டுக்கு வந்து லிஸ்ட் வாங்கிக்க.

நிர்: நீங்க இந்த மாதிரி நடுவிலே பேசறதா இருந்தா..... நான் வீட்டுக்குப் போறேன்.

நாத: நான் இனிமே பேசலே..... ஐ ஆம் சாரி !.....

நிர்: நீங்க வாக்கிங் போய்ட்டு வாங்க. அ க்குள்ளே நான் நிம்மதியா இண்டர் வ்யூவை முடிச்சுப்பேன்!

கரே: அது நல்ல ஐடியா ஸார் !

நாத: சரி...... பாவம் இந்தப் பையன்! நீ இஷ்டத்துக்குப் புளுகு.... நான் போறேன்.

நிர்: கேளுங்க மிஸ்டர் கரேஷ் !

கரே: இது வரை நீங்க கார் ஓட்டி எத்தனை விபத்துக்களில் மாட்டிகிட்டிருக்கீங்க?

நிர்: ஒண்ணுலேகூட இல்லே!

கரே: ஒரு ஆக்ஸிடெண்ட்கூட இல்லையா?

நிர்: ஆக்ஸிடெண்ட் நிறைய இருந்தது! நான் ஒண்ணுலேகூட மாட்டிக்கல்லே.....

கரே: அது எப்படி?

நிர்: எங்க மாமா பிரண்ட்தான் போலீஸ் டிபார்ட் மெண்ட்லே இருக்காரே!

கரே : உங்களுக்காகவேதான் அவர் போலீஸ் டிபார்ட்மெண்டிலேயே வேலை பார்க் கிறாரா ?

நிர்: ஹஹ்ஹா! (சிரிக்கிறாள்)

கரே: ப்ளீஸ்! சிரிக்காதீங்க!.... எனக்கு உடம்பெல்லாம் உதறுது !

நிர்: கிண்டல் பண்ணறீங்களா ?

கரே: நோ நோ! சீரியஸா சொல்றேன்.

நிர்: ஹ ஹா !

கரே : சீரியஸ்ன்றேன்..... நீங்க சிரிக் கிறீங்களே !

நிர்: சீரியஸா ஜோக் அட்ச்சாதான் எனக்குச் சிரிப்பு வரும்!

கரே: ஆமாம்.... நீங்க இந்தமாதிரி தமிழ் பேச எங்கே கத்துக்கிட்டீங்க?

நிர்: ஏன்..... என் டமிலுக்கு என்ன ?

கரே: உங்க டமிலுக்கு ஒண்ணுமில்லே.... நம்ம தமிழ் நாட்டுத் தமிழ்தான் ஒரு மாதிரியா இருக்கும்..... நிஜமாவே ரொம்ப ஸ்டைலா பேசறீங்க.

நிர்: தாங்க்யூ !

கரே: அப்ப கார்லே கொஞ்ச தூரம் போலாமா ?

நிர்: நான் எப்படி ஓட்டறேன்னு பார்க் கத்தானே! ஆல் ரைட்...... லெட் அஸ் கோ!

[காரைக் கிளப்புகிறாள்.]

கரே: மெதுவா..... மெதுவா !

நிர்: பயப்படாதீங்க! ஒண்ணும் ஆகாது! எங்க மாமா பிரண்ட் இருக்காரே!

கரே: அவராலே என்ன முடியும்... நாம கம்பி எண்ணாம பார்த்துப்பார் — அவ்வளவு தானே? நம்ப எலும்பை எண்ணுமளிருக் கணுமே, அதை யார் பார்த்துப்பாங்க?

நிர்: ஹஹ்ஹஹ்ஹா!.... (தொடரும்)

காபி நன்றாக புத்தம் புதிய
பொடியே வேண்டும்.
புதுமணம் கமழும் காபிபொடி
ஒன்றுதான்! அது

# ப்ரூக் பாண்ட் காபி

சீலிட்ட பையிலிருந்து கிடைக்கும் காபியை ஏன பருகுகிறீர்கள்? ஏனெனில், நீங்கள் காத்திருக்கும் போதே காபியை வறுத்து அரைப்பதிலுள்ள புது மணம் குறைந்து போய்விடும்! இதன் காரணமாகவே அநேகர் மற்றக் காபிப்பொடிகளை விட்டு ப்ரூக் பாண்ட் காபியையே தேடி வாங்குகிறார்கள். இது ஒன்றுதான் வறுத்து அரைத்தவுடன் காணப்படும் புது மணம், சுவையின் தரத்திற்கு உண்மையில் எடுத்துக் காட்டாக விளங்குகிறது. இதற்கு காரணம், ப்ரூக் பாண்ட் பொறுக்கி எடுத்த காபிக் கொட்டைகளை பதமாக வறுத்து, அரைத்து சரியான தருணத்தில் காபியின் இயற்கையான புது மணத்துடன் காற்றுப்புகாத பைகளில் அடைத்து சீலிட்டு விடுகின்றனர். நீங்களும் தயக்கமில்லாமல் ப்ரூக் பாண்ட் காபி உபயோகிக்கத் தொடங்கி அதன் புத்தம் புதிய பூரண மணத்தை நன்றாக அனுபவியுங்கள்!




பைக்குள்
அடங்கியது
பூரணமான
புதுமையும்
நறுமணமும்
சுவையும் கூடிய
ப்ரூக் பாண்ட் காபி

### அத்தியாயம் 40

## மலரும் மங்கையும்

மிருணாளினி பொன்னகர வாசிகளிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பி வேறோர் இடத்தில் தன் நற்பணிகளைத் தொடரச் சென்று விட்டால் வாசகசாலை அந்தக் கிராம மக்களின் பொதுவுடைமை யாகிவிடும். ஆனால் இப்போது மாலை நேரங்களில் மட்டுமே அந்தச் சிறு குடில் வாசகசாலையாகவும் கிராமிய மக்கள் உபயோகமாகப் பொழுதுபோக்கும் இடமாகவும் அமைந்திருந்தது. ஆறரை மணிக்குப் பிறகு அனைவரும் அவரவர் வீடுகளுக்குத் திரும்பிச் சென்றுவிட அது மிருணாளினியின் பிரத்தியேக அறையாக மாறியது. கயிற்றுக் கட்டில் இப்போது அறையின் மத்தியில் இருக்கும்; ஒரு பக்கம் பெட்ரோமாக்ஸ் விளக்குப் பிரகாசமாக ஒளி



# காலச் சக்கரம்

கி. ராஜேந்திரன்

சிந்தும். அவளுக்கென்று இருந்தவை சிறிதும் பெரிதுமான இரண்டு பெட்டிகள் தாம். அவற்றுள் ஒன்றிலிருந்து ஒரு மெல்லிய ஜமக்காளத்தைதயும், காற்றூதினால் பருக்கும் தலையணையையும் எடுத்துக் கட்டிலின் மீது போட்டு விட்டால் அப்புறம் தூக்கம் வரும் வரை படித்துக் கொண்டிருப்பதுதான் மிருணாளினியின் வேலை. எளிய முறையில் தனக்குச் சமைத்துக் கொள்ளவும் அவள் தயார்தான். ஆனால் பெரும்பாலும் பொன்னகரவாசிகள் அதற்கு அவளை அனுமதிக்காமல் உணவு வகைகளையும் தின்பண்டங்களையும் பழங்களையும் கொண்டு வந்து குவித்தார்கள். 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லிப் பார்த்தும் அவர்கள் கேளாததால் உணவுப் பொருள்கள் வீணாவதைத் தடுக்க மிருணாளினி ஒரு விதி செய்தாள். அதாவது பொன்னகரவாசிகள், மாதத்தில் பதினைந்து நாட்கள் அவள் தானாகவே உணவு தயாரித்துக்கொள்ளச் சம்மதித்துவிட வேண்டும். மீதமுள்ள பதினைந்து தினங்களிலும் அவர்கள் ஓர் ஒழுக்கத்துக்குக் கட்டுப்பட்டு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு குடும்பத்திலிருந்து மட்டும் தனக்கு அன்ன ஆகாரம் அனுப்பி வைக்க வேண்டும்.

அதன்படி இன்று சிவநேசன் வீட்டினரின் முறையாதலால் அவர் ரொம்பவும் உற்சாகமாக இருந்தார். "தங்கச்சி வேறு வந்திருக்கிறாள்; நீங்க நம்ம வீட்டுக்கே வந்



துடுங்க. எல்லாருமாச் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுவோம்'' என்றார்.

''ஆமாம், கண்டிப்பா இதுக்கு நீங்க சம்மதிச்சுத்தானுகனும்'' என்று தங்கப்ப னும் ஒத்துப் பாடினன்.

''இந்தக் கிராமத்தினரை விரோதித்துக் கொள்ள இதைவிட வேறு எதையும் நான் செய்ய வேண்டாம். சிவநேசனுக்கு மட்டும் நான் தனிச் சலுகை காட்டியதாகக் குற்றம் சாட்டிக் கோபிப்பார்கள். என்றாலும், முதலாளி ஐயாவைக் கொஞ்சம்.... கொஞ் சம்.... அதற்கு என்ன பெயர் சொன்னீர்கள்? வேடிக்கையாக இருக்குமே?'' என்று சிவநேச னைப் பார்த்துக் கேட்டாள் மிருணளினி.

''காக்காய் பிடிப்பதா?''

''அச்சா! அதேதான்! முதலாளியைக் கொஞ்சம் காக்காய் பிடித்து வைத்தால் நல்லதுதானே? சமயத்துக்கு உபயோகமாக இருக்கும்!'' என்று கூறிப் பரிகாசமாகக் கண் சிமிட்டினாள் அவள்.

சிரிப்பு அடங்கிய பிறகு, ''வாசகசாலையைப் பார்த்து விட்டுக் கிளம்புவோமே?'' என்றார் சிவநேசன்.

அங்கு அதிகமான புத்தகங்கள் ஏதுமில்லையாதலால் வாசகசாலையை ஒருமுறை நோட்டம்விட வெகுநேரமாகி விடவில்லை. இருந்த இருபது முப்பது புத்தகங்களும் கம்யூனிஸத்தின் சிறப்பைப் பறைசாற்றுபவையாக அமையாதது தங்கப்பனுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாக இருந்தது. எல்லாம் அநேகமாக அகில உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளர்கள் படைத்த நாவல்களின் தமிழாக்கங்கள்தான். ஒருசில விஞ்ஞான நூல்களும் இருந்தன.

''உங்க மீது குறை கூறி வம்புக்கு இழுக்க ஒரு சந்தர்ப்பம் இங்கு கிடைக்கும் என்று ஆவலோடே எதிர்பார்த்தேன். நடக்கலே!'' என்றான் தங்கப்பன் நூல்களைச் சுட்டிக்காட்டி.

''நீங்கள்தான் சொல்லி விட்டீர்களே, நான் பசுத் தோல் போர்த்திய புலி என்று'' என்றாள் மிருணாளினி, நகைத்துக் கொண்டே. ''இங்கு மட்டும் என் சுயரூபத்தைக் காட்டுவேனா நான்? ஆனால் ஒன்று: நான் வேறு ஊருக்குப் போன பிறகு இங்கே பொன்னகரத்தினர் வாங்கிச் சேர்க்கும் புத்தகங்கள் கம்யூனிஸச் சார்புடையவையாயிருந்தால் நான் அதிசயப்பட மாட்டேன்; அதற்கு நான் பொறுப்புமில்லை!''

''புரியுது!'' என்று தலையாட்டினான், அவன். பிறகு, ''இத்தனை எளிமையாக வாழ்க்கை நடத்த உங்களால் எப்படி முடிகிறது?'' என்று உண்மையிலேயே அதிசயத்துடன் சுற்றுமுற்றும் பார்த்துக் கேட்டான். ''பெரிய குடும்பத்தில் பிறந்தவங்க நீங்கன்னு கிராமத்தார் எல்லாருமே அனுமானிக்கிறாங்களே.''

''எனக்குச் சொத்து இருக்கிறது என்பதை நான் மூடி மறைக்க விரும்பவில்லை. மக்களுக்குத் தொண்டு புரிவது எனக்குப் பிடித்திருக்கிறது. எளிமையான வாழ்க்கை எனக்குப் பழகி விட்டது. அவ்வளவுதான்.''

நத்தை தன் கூட்டுக்குள் சுருங்கிக் கொள்வது போல் அவளும் வெளிப் பார்வைக்குத் தென்படாத ஒரு கவசத்துக்குள் தனக்குப் பாதுகாப்பு தேடுவதுபோல் இருந்தது தங்கப்பனுக்கு. ''என்றாலும், அதுக்கு ஏதாவது ஒரு வலுவான காரணம் இருந்துதான் ஆகணுமென்று எனக்குத் தோணுது.''

ஒரு கணம் அவள் அவனை ஏறிட்டு நோக்கினாள். ''உங்களைக் கண்ணியமானவராகக் கருதுகிறேன். என்னை வற்புறுத்தாதீர்கள்!'' என்ற போது, எங்கே அவனிடம் தான் வைத்திருக்கும் மதிப்பைக் குறைத்துக் கொள்ளும்படியாகி விடுமோ என்று அவள் ரொம்பவும் கவலைப்படுவதுபோல் காணப்பட்டாள். ''ஆனால் ஒன்று, என்றைக்காவது என் வாழ்க்கைக் கதையை நான் யாரிடமாவது சொல்வது என்று தீர்மானித்தால்

## முன்கதைச் சுருக்கம்

சந்தியாபுரியில்வசிக்கும் உஷாவுக்குத்தங்கப்பன் மீது சிறு வயதிலிருந்தே பல காரணங்களை முன்னிட்டு வெறுப்பு வளர்ந்து வருகிறது. உஷாவின் தகப்பனார் தீனதயாளு தமிழக சர்க்காரில் ஒரு மந்திரியாக விளங்குகிறார். செல்வச் செருக்கிலும் அதிகார ஆணவத்திலும் பதவிப் பெருமையிலும் மிதந்து வளர்கிறாள் உஷா.

தங்கப்பன் படித்துப் பட்டம் பெற்ற பிறகு தன் குடும்பம் சந்தியாபுரியில் இழந்து விட்டிருக்கும் நற்பெயரை மீண்டும் நிலைநாட்ட நினைக்கிறான். பல பேருக்கு வேலை வாய்ப்பளித்துப் பல குடும்பங்களை வாழ வைக்கும் நோக்கத்துடன் தன் சொத்தையெல்லாம் விற்று ஒருதொழிலகத்தைத் தொடங்குகிறான். அவனைத் துச்சமாகவே கருதி வரும் உஷா அவனது முன்னேற்றத்தைக் கண்டு பொறுக்காமல் அசூயையும் வெறுப்பும் கொண்டு அவனுக்குத் தொழிலகத்தில் பல இடையூறுகளை விளைவிக்கிறாள். எனினும் அவள் அநுதாபத்துக் குரியவள் என்று கருதுகிறான் தங்கப்பன். அவளை இந்தப் பரிதாப நிலைக்கு ஆளாக்கியவர்கள் மீது தான் அவனுக்குக் கோபம் வருகிறது.

தனக்கு முறைப் பெண்ணான செல்லத்திடம் தன் லட்சியங்கள் நிறைவேறும் வரை திருமணம் பற்றித் தான் யோசிக்க முடியாது என்பதாகக் கூறிச்சென்னைக்கு அவள் பெற்றோருடன் அவளைத் திருப்பி அனுப்பி விடுகிறான் தங்கப்பன். செல்லம் அவனுக்காகக் காத்திருக்கத் தீர்மானிக்கிறாள்.

தீனதயாளு புதிய பாராளுமன்ற உறுப்பினராவதற்குத் தேர்தலில் போட்டியிடுகிறார். தங்கப்பன் அவரை நேரடியாக எதிர்க்கா விட்டாலும் சென்னை சட்டசபை ஸ்தானத்துக்கு எதிர்த்தரப்பில் தான் நிற்கிறான். போட்டி இவ்விருவருக்கும் இடையில்தான் என்பது போன்ற ஒரு சூழ்நிலை உருவாகிறது. தங்கப்பனுக்கு அவன் தொழிலகம் உருவாகவும் இதர பல விஷயங்களிலும் பெருந்துணையாக இருந்து வந்திருக்கும் மாருதி, திடுமென ஓரிரவு குண்டர்களால் அடித்து நொறுக்கப்படுகிறார். அதையே தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு வெற்றி காண விழைகிறான் தங்கப்பன்.

இந்நிலையில் அவனுக்கு மிருணாளினி என்ற ஒரு சமூக சேவகியிடம் சந்திப்பு ஏற்பட்டு நட்பும் வளர்கிறது. அவள் கம்யூனிஸச் சார்புள்ளவள் என்றும் பொதுத் தொண்டு என்ற போர்வைக்கடியில் அவள் தான் விரும்பும் கம்யூனிஸச் சித்தாந்தங்களைப் பரப்பி வருகிறாளென்றும் சந்தேகிக்கிறான் தங்கப்பன். மாறுபட்ட கொள்கைகள், நோக்கங்கள் உடையவர்களாயிருந்தும் அதனால் அவர்களது சிநேகத்துக்குக் குந்தகம் ஏற்படவில்லை. அது மேலும் பலப்படவே செய்கிறது. தொடர்ந்து சுழல்கிறது.....

**காலச் சக்கரம்**

## பகல் இரவு பாராமல்



## ஷார்ப் ஜங்கார் உங்கள் வாழ்க்கைக்கு இன்ப மூட்டுகிறது



மாடல் BXS-338 (Portable Set)
8-டிரான்ஸிஸ்டர் 2-பாண்ட்
தூல் கண்ட்ரோல்
ரூ. 225
உற்பத்தி வரி ரூ. 30. வரி தனி



மாடல் 5-A 46
6 டியூப் 4-பாண்ட்
மற்றவைக்கு தூல் கட்டுப்பாடு
ரூ. 350
உற்பத்தி வரி ரூ. 40. வரி தனி



மாடல் BZ-490 (Portable Set)
9-டிரான்ஸிஸ்டர் 4-பாண்ட்
நுட்பமான ஒலியமைவுகள்
ரூ. 375
உற்பத்தி வரி ரூ. 40. வரி தனி

வீட்டிலோ, வீட்டிற்கு வெளியிலோ ரேடியோ கேட்கும் எல்லா வயதினருக்கும் ஷார்ப் டிரான்ஸிஸ்டர்கள் இன்பமளிக்கின்றன. நம்பிக்கை உடையவை. கற்பாறை போன்ற உறுதியானவை. நுட்பம் மிகுந்த அம்சங்கள் கொண்டதால் முதல்தரச் செயல்திறன் உள்ளவை. மிதமான விலையும் கவர்ச்சியான தோற்றமும் உள்ள இவை முதல்தரத்தையே விரும்புவோர்களின் திருப்திக்காகவே செய்யப்பட்டுள்ளன.

தரம்மிக்க பொருள்களைத் தயாரிப்பதில் உலகப் புகழ் பெற்ற ஜப்பானிய நாட்டு ஹயகாவா எலக்ட்ரிக் கம்பெனியின் தொழில் கூட்டுறவினுடன் ஷார்ப் ஜங்கார் ரேடியோக்கள் செய்யப் படுகின்றன என்பதைக் கவனியுங்கள்.

**ஷார்ப் ஜங்கார்**



RTM No. 197008

இந்தியன் பிளாஸ்டிக்ஸ் லிமிடெட்
கோட்டன் ஹவுஸ், பம்பாய்-1



## குழந்தைகள் மார்கழி மாதத்தில் என்ன செய்ய வேண்டும்?

அருமைக் குழந்தைகளே!

1. மார்கழி மாதம் பிறக்கு முன் திருப்பாவை, திருவெம்பாவை பாசுரங்களை மனப்பாடம் செய்யுங்கள். மார்கழி முப்பது நாட்களும் காலையில் நீராடி ஆண்டவனை நினைத்துப் பாடல்களைச் சொல்லிக் கொண்டு ஊர்வலம் வாருங்கள்.

2. திருவெம்பாவை இருபது பாடல்களையோ திருப்பாவை முப்பது பாடல்களையோ தெளிவாகவும் அழகாகவும் பாடப் பழகிக் கொள்ளுங்கள்.

3. குழந்தைகளே! இப்பொழுதே மனப்பாடம் செய்ய ஆரம்பித்தால்தான் மார்கழி மாதம் ஆரம்பத்துக்குள் 'நெட்டுரு' ஆகும்.

4. மார்கழிக்குள் மனப்பாடம் செய்யுங்கள்; மார்கழி நீராடுங்கள்; ஊர்வலம் வாருங்கள்; தூங்கும் குழந்தைகளையும், பெரியவர்களையும் பாட்டுப் பாடி எழுப்புங்கள்; ஆயுள் பூர்ணமாக ஆனந்தமாக வாழுங்கள்.

— ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்

முதலில் உங்களைத்தான் தேடுவேன்'' என்றாள் மிருணாளினி, அந்நியோன்னிய பாவத்துடன்.

தங்கப்பன் திகைக்கவில்லை. ஒரே நாள் சந்திப்பில் ஒருசில மணி நேரப் பழக்கத்தில் இந்த அளவுக்கு அவள் தன்னிடம் நெருக்கமான நட்புரிமையும் நம்பிக்கையும் பாராட்டுவது அசாதாரணம்தான் என்றாலும் அது ஏனோ அவனுக்கு வியப்பாக இருக்க வில்லை. ''உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானதற்காக நானும் என்னைப் பாக்கியசாலி என்று எண்ணிப் பெருமிதப்படுவேன்'' என்றான்.

அந்தக் கொட்டகையை விட்டு அவர்கள் வெளியே வந்தார்கள். இருள் கவிந்து கொண்டிருந்தது. தோட்டத்தின் ஒரு மூலையில் இருந்த பவழமல்லி மரத்தின் பச்சை நிறத்தைத் தவிர வேறு எதையும் அது வரை காணாத தங்கப்பன் இப்போது வெள்ளை வெளேரென்று இருளிலும் பளிச்சிடும் மலர்களைப் பார்த்தான். இரவுக் கன்னி நட்சத்திரக் குப்பையைக் கூட்டிக் கூடையில் வாரி எடுத்து அதனை அப்படியே அந்த இளம் மரத்தின் மீது கவிழ்த்து விட்டாளோ என்ற விநோதமான கற்பனை அவன் உள்ளத்தில் எழுந்தது. அதை வாய்விட்டுச் சொல்லலாமா வேண்டாமா என்று சற்று யோசித்தான் அவன். மிருணாளினி அதனை ரசிப்பாள் என்று அவனுக்குப் பட்டது; சிவநேசன் ஒரு வேளை சிரிக்கலாம் கேலியாக.

அதே சமயத்தில் மிருணாளினியும் அதே மரத்தைப் பார்த்து விட்டு அதைப் பற்றியே பேசியது அவனுக்கு மிகுந்த சந்தோஷத்தையும் ஆச்சரியத்தையும் அளித்தது. ''இந்தப் பவழமல்லிகைதான் எத்தனை அழகு? மரத்திலேயே சிறு சிறு நட்சத்திரங்களாகப் பூத்துக் குலுங்கி மணம் பரப்பும்போது ஓர் அழகு. அதிகாலை நேரத்தில் சூரிய கிரணங்கள் அவற்றின் மீது பட்டதும் இங்கொன்றும் அங்கொன்றுமாய் அவை அடுத்தடுத்து உதிரும் அழகைப் பார்த்துக் கொண்டு நான் அப்படியே நேரம் போவது தெரியாமல் நின்று விடுவேன்! நிதானமாகக் குட்டிக்கரணம் போட்டும் பம்பரம்போல் சுழன்றும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக விழும். பரவலாக அவை தரையில் விழுந்து கிடக்கும் காட்சியே மனத்துக்கு ரம்மியமாக இருக்கும். ஒரே ஒரு மலரைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டால் அதன் ஆரஞ்சு நிறமும் வெண்மையும் கண்ணைப் பறிக்கும். எல்லா மலர்களையும் பொறுக்கிப் பூக் கூடையில் போட்டுக் கொண்டு மொத்தமாகப் பார்த்தால் அது இன்னொரு விதத்தில் அழகாக விளங்கும். மாலையாகக் கோத்தாலோ வெண்மையும் இளஞ் சிவப்பும் மாறி மாறித் தோன்றி அசாத்தியமான அழகுடன் விளங்கும்!''

சிவநேசன் வீடு நோக்கி நடந்து கொண்டே அவள் இவ்விதம் பேசி வந்தாள். அவனுக்கும் தான் சந்தித்துள்ள பிறருக்கு மிடையில் உள்ள ஒரு முக்கியமான வேறுபாட்டை உடனடியாக உணர்ந்தான் தங்கப்பன். மற்றவர்கள் பேசும்போது பிறரைத் துன்புறுத்தவோ திருப்திப்படுத்

றுவோ வேண்டும் என்ற நோக்கத்தோடு பேசினார்கள்; சிந்தித்து வார்த்தைகளை வெளியிட்டார்கள். ஏன், தானே சற்று முன்னால் அந்தப் பவழ மல்லிகை மரத்தைப் பற்றித் தனக்குத் தோன்றிய கற்பனையைச் சொல்லலாமா வேண்டாமா என்று யோசிக்கவில்லையா? ஆனால் மிருணாளினியோ அதைப் பார்த்த மாத்திரத்தில் அதைப் பற்றிய வர்ணனையில் ஈடுபட்டாள். தோற்றத்தில் மட்டும் அவள் எளிமையானவளல்ல; உள்ளத்தாலும் எளிமையானவள். பவழமல்லிகை மலர்களைப் போலவே அவள் மனமும் வெண்மையும் எளிமையும் புதுமையும் தெளிவும் பரிசுத்தமும் மென்மையும் கொண்டதாயுள்ளது.

''உங்களை இது வரைக்கும் ஒரு சமூக சேவகி என்றும் அரசியல்வாதி என்றும்தான் நினைத்திருந்தேன். நல்லதொரு கவி உள்ளமும் கொண்டவங்க என்கிறது இப்போது தான் புரிகிறது'' என்றான் தங்கப்பன்.

''கவிதையா?'' என்று கேட்டு மெல்லச் சிரித்தாள் அவள். ''சிவநேசனிடமிருந்து நான் பல சொற்றொடர்கள், பழமொழிகளைப் புதிது புதிதாகக் கற்றுக் கொண்டு வருகிறேன். அவற்றில் ஒன்றைச் சற்று மாற்றிவிட வேண்டும். 'கழுதைக்குத் தெரியுமா கவிதை வாசனை' என்று.''

''கவிஞர் இயற்றுவதெல்லாம் கவிதையுமில்லை. கவிதை இயற்றுவோரெல்லாம் கவிஞருமில்லை என்று ஒருத்தன் ரொம்பச் சாமர்த்தியமாகச் சொல்லி வைத்திருக்கிறான். ரசிகத் தன்மையும் கற்பனைத் திறனும் கொண்டிருக்கும் ஒவ்வொருவருமே உள்ளத்தால் கவிஞர்தான்.''

சிவநேசனின் வீட்டைச் சமீபித்துக் கொண்டிருந்தார்கள். ''சத்தியபுரிக்கு வர நேர்ந்தால் கண்டிப்பாக நீங்க நம்ம வீட்டுக்கு வரவேண்டும். தாமரைத் தொழிலகத்துக்கும் உங்களை அழைச்சுக்கிட்டுப் போய்க் காட்டியாகணும் எனக்கு.''

அவருடைய வீட்டு வாசலில் அடியெடுத்து வைத்தபடியே, ''ஏதோ உபசாரத்துக்கு இப்படி அழைத்து விட்டுத் தப்பித்துக் கொள்ளலாம் என்று பார்க்காதீர்கள். கண்டிப்பாக வந்து சேர்ந்து விடுவேன்'' என்று பயமுறுத்தினாள் மிருணாளினி.

தங்கப்பன் பரவசத்துடன், ''வாங்க, அவசியம் வாங்க'' என்று திரும்பத் திரும்பச் சொன்னான். ''அரசியல் ரீதியிலே கொள்கை அளவிலே நாம தர்க்கம் புரிந்து தீர்த்துக்கிட வேண்டிய பிரச்னைகள் நிறைய இருக்குதே!''

''தர்க்கமாவது, விவாதமாவது? இனிமேல் அதற்கெல்லாம் இடமேது? இன்று நான் பாடியபடி பாடினீர்கள்; இனிமேல் நான் ஆட்டி வைக்கிறபடியும் ஆட வேண்டியது தானே?'' என்று கேட்டுக் குழந்தைத்தனமான குறும்புடன் களுக்கென்று சிரித்துக்கொண்டே சிவநேசனின் வீட்டுக்குள் அவள் குதித்தோடிச் சென்று நுழைந்தாள்.

## அத்தியாயம் 41

# தேர்தல் ஜுரம்

தங்கப்பன் தனக்குத் தானே கொடுத்துக் கொண்ட ஒரு நாள் விடுமுறை வெகு சீக்கிரம் ஓடி மறைந்து விட்டது. மறுநாள் முதல் அவன் மீண்டும் தேர்தல் களத்தில் தீவிரமாகக் குதித்தான். மாருதியை ஒவ்வொரு கூட்டத்துக்கும் அழைத்துப் போய் மேடையிலேற்றி அமரச் செய்தான். ஒவ்வோர் இடத்திலும் அவர் மேடை மீது ஏற, படும் சிரமத்தைக் காணச் சகிக்கவில்லை அவனுக்கு. மேடை ஏறுவதென்ன, வெறுமனே உட்கார்ந்திருப்பதே சித்திரவதையாகத்தான் இருந்தது அவருக்கு. பூரண குணமடைய இன்னும் பல நாட்கள், வாரங்கள் பிடிக்கும். வருஷக் கணக்காகத் தாம் பார்த்து வந்த புனிதமான உபாத்தியாயர் தொழிலை யார் மீதோ கோபித்துக் கொண்டு புறக்கணித்ததற்காகக் கிடைத்த தண்டனை இது என்று மனப்பூர்வமாக நம்பி மனமுடைந்து போனார் மாருதி. ''உத்தியோகத்தில் எனக்குப் பிரமோஷன் கொடுக்கலை என்கிறதற்காக நான் கல்வி புகட்டும் தெய்வீகத் தொண்டைக் கைவிட்டிருக்கலாமா?'' என்று கூறி நொந்து கொண்டார். இருப்பினும் உற்சாகத்துடன் அவர் தங்கப்பனின் விருப்பத்துக்கிணங்கி அவன் பேசும் மேடைகளிலெல்லாம் காட்சியளித்தார். தலையிலும் உடலிலும் கட்டுக்களுடன் உட்கார்ந்திருக்கும் அவரைப் பார்த்ததுமே மக்களிடையே ஒரு சலசலப்பு உருவாகத் தொடங்கும், ஒவ்வொரு பொதுக்கூட்டத்தின் போதும். இத்தனைக்கும் தங்கப்பன் அவரைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டான். மக்கள் தாங்களாகவே உண்மையை ஊகிக்க ஆரம்பித்தார்கள். ஒருவருக்கொருவர் தங்கள் அபிப்பிராயங்களைப் பகிர்ந்து கொள்ளவும் தொடங்கினார்கள். இரண்டொரு தினங்களிலேயே தனக்கு ஆதரவு அமோகமாகப் பெருகி வருவதைக் கண்கூடாகக் கண்டான் தங்கப்பன். செல்லுமிடங்களிலெல்லாம் அவனுக்குப் பலமான வரவேற்பு இருந்தது. 'உண்மை ஜனநாயகம் தழைக்கத் தடியடிபடவும் தயங்காத தீரர்' என்று மாருதியும் போற்றுதலுக்கு உள்ளானார். மாருதியின் வீரம் பற்றிய கதைகள் ஜுர வேகத்தில் அந்த வட்டாரம் முழுவதும் பரவ ஆரம்பித்தன.

தங்கப்பனுக்கு இவ்வாறு நாளுக்கு நாள் செல்வாக்குப் பெருகி வருவது அவனை எதிர்த்த ஆராவமுதனுக்குக் கலக்கத்தைக் கொடுத்திருக்க வேண்டும். தங்கப்பனின் தொழிலகத்தில் தகராறு என்றும் அதன்

பொருட்டு வேலைநிறுத்தம்கூட நிகழ்ந்தது நினைவிருக்கும் என்றும் அவர் பேச ஆரம்பித்தார். ''மாருதி தங்கள் நலனுக்கு எதிராக அப்போது நடந்து கொண்டு முதலாளி தங்கப்பனுக்கு 'ஆமாம் சாமி' போட்டதன் விளைவாக உள்ளுக்குள் பொருமிக் கொண்டிருந்த சில தொழிலாளர்கள், சமீபத்தில் அவரை அடித்துப் போட்டிருக்கலாம் ஆத்திரம் தீர. மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவது போல் இந்த நிகழ்ச்சியைத் தேர்தலுடன் சம்பந்தப் படுத்துவது அபத்தம்'' என்றார். கைக்கட்டு, தலைக்கட்டு, கால் கட்டுடன் மேடை மீது அவர் கொலு வீற்றிருப்பதைப் பார்த்து மக்கள் ஏமாந்து விடக் கூடாது என்று எச்சரித்தார் பல பிரசங்கங்களில்.

இந்த வலையில் அவர் விழ வேண்டும் என்றுதான் தங்கப்பனும் காத்திருந்தான். ''எங்கப்பன் குதிருக்குள் இல்லை என்பது போலிருக்கிறது இவர் பேச்சு'' என்றான். ''இந்தத் தேர்தலின் பொருட்டுத்தான் இவர் இப்படி அடிபட நேர்ந்தது என்று நான் எங்குமே என்றுமே சொன்னதில்லை. அப்படியிருக்க இவராகவே நான் எழுப்பாத ஒரு பிரச்னைக்குப் பதிலளிக்க முன் வருவானேன்?'' என்று குத்தலாகக் கேட்டான். ''இதை இன்னார்தான் செய்தார்கள் என்று குற்றம் சாட்ட நான் தயாராக இல்லை; ஆனால் தொழிலாளர் சமூகத்தின் மீது அற்பத்தனமாகச் சாட்சியமேதுமின்றியே குற்றம் சாட்டுவதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்'' என்று காது செவிடாகும்படி எழுந்த கோஷத்துக்கிடையே முழக்கினான் அவன். ''அப்படியே என் தொழிலாளர் இந்த நீசத்தனமான காரியத்தில் இறங்குவதென்றாலும் அவர்கள் அதற்காகத் தேர்தல் சமயம்வரை காத்திருக்க வேண்டும் என்பதில்லை; அதற்கு முன்பாகவே அவர்களுக்குப் பழி வாங்கிக் கொள்ள வேண்டிய அவகாசம் இருந்தது. ஆகவே, என் கருத்தில் இதை வேறு யாரோதான் செய்திருக்க வேண்டும். ஆனால் 'இந்தத் தருணத்தில் மாருதியின் கையைக் காலை முறித்தால்தானே தேர்தலை முன்னிட்டுச் செய்யப்பட்ட காரியம் இது என்று பரவலாகப் பலரும் கருத, தொழிலாளர், தேர்தல் திரையின் பின்னால் தலை மறைவாக நின்று தங்களை அபவாதம் சூழாமல் காத்துக் கொள்ளலாம்' என்று என் மதிப்புக்குரிய எதிர்த்தரப்பாளர் கூறி, மீண்டும் தொழிலாளர் பெருமக்கள் மீது சந்தேகத்தைக் கொட்டி விடுவாரேயானால் நான் அதிசயப்பட மாட்டேன்'' என்று இடித்துக் காட்டினான் தங்கப்பன்.

இந்தச் சொற்பொழிவுகள் பெருத்த ஆரவாரத்துடன் வரவேற்கப்பட்டன. தங்கப்பன் தேர்தலில் வெற்றி பெறுவது சர்வ நிச்சயம் என்ற நிலை வேகமாக உருவாகி வந்தது.

(தொடரும்)

# அண்ணாமலையில் ஓர் அன்புப் பணி

மதுரையிலிருந்த பள்ளி மாணவன் வேங்கடராமணனின் காதுகளில் அருணாசலம் என்ற வார்த்தை விழுந்ததுமே முன் எப்போதோ விட்ட குறை அவனை வந்து தொட்டது. 'தொட்டது' என்று சொன்னால் போதாது. அவனைப் பற்றியிழுத்து வந்து திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் உறையும் அருணாசலேசனின் முன்பாகவே நிறுத்திவிட்டது. வீடு வாசல், உற்றார் பெற்றார் யாவரையும் வேங்கடராமணன் மறந்தான். அதோடு மட்டுமல்ல; ஐம்புலன்களும், புத்தியும், சித்தமும், மனமும், அகங்காரமும் கொண்ட தனது ஜீவான்ம பாவத்தையே அடியோடு மறந்தான். அருணாசலேசுவர ஆலயத்தினுள்ள பாதாள லிங்கக் குகையில் பரம் பொருளை நேராக அநுபவித்துக் கொண்டு பிரம்மாநுபவ வெள்ளத்தில் முழுகிவிட்டான். அவனது உடம்பை விஷப் பூச்சிகள் கடித்தன; புழுக்கள் குடைந்தன; விளையாட்டுச் சிறுவர்கள் பூமிக்கடியில் இருளில் அமர்ந்திருந்த இந்தப் 'பைத்தியத்'தின் மீது கல்லையும் கட்டியையும் விட்டு அடித்தார்கள். சேஷாத்திரி ஸ்வாமிகள் என்ற சித்தபுருஷர் தம்மாலியன்ற மட்டும் வேங்கடராமணனுக்குக் காவல் இருந்தார். ஆனால் எக்காவலும் தேவைப்படாத ஏகாந்தப் பெருவெளியிலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்தான் அந்த இளைஞன்.

பிற்காலத்தில் இந்த வேங்கடராமணனைத்தான் பகவான் ரமண மகரிஷிகளாக உலகம் அறிந்தது. ஆயினும் அவர் மௌன அநுபூதியில் அமர்வதற்கு இடமாக அமைந்த பாதாள லிங்க ஆலயம் உலகம் அறியாத இருள் குகையாகவே நீண்ட காலம் இருந்தது. பிற்பாடு ரமண மகரிஷிகளிடம் நமது ஒவ்வோர் அணுவிலும் அன்பைத் தேக்கியிருந்த பரம பக்தை ஸ்ரீமதி தலியார்கான் அம்மையும், மற்ற சில அடியார்களுமாகச் சேர்ந்து பாதாள லிங்கக் கோயிலைப் புதுப்பித்தனர். புதிதாக நிர்மாணிக்கப்பட்ட பாதாளலிங்கக் கோயிலை 1949 மே மாதம் அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜி அவர்கள் தில்லியிலிருந்து வந்து திறந்து வைத்தார்கள்.

தற்போது பாதாள லிங்கத்துக்கு நித்தியப் படி பூஜை நிகழ்த்துவதற்கும், பாதாளலிங்க ஆலயத்துக்குக் கும்பாபிஷேகம் செய்வதற்கும் ஸ்ரீமதி தலியார்கான் பெருமுயற்சி எடுத்து வருகிறார். இப்பணிக்கு இருபதினாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது. சில தரும புண்ணியம் பெறவும், ரமண பகவான் அருளைப் பெறவும், அன்பே உருவான ஸ்ரீமதி தலியார்கான் அம்மையின் மனத்தைக் குளிர்விக்கவும் அன்பர்களுக்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம். நிதி உதவி அனுப்பி வைக்க வேண்டிய விலாசம்: **ஸ்ரீமதி F. தலியார்கான், ஸ்ரீரமணாசிரமம், திருவண்ணாமலை.**

## முன் கதைச் சுருக்கம்

பர்மாவிலிருந்து கப்பலில் வந்து இறங்கிய அகதிகளில் ஒருவன் சபேசன். சென்னையில் செய்வதறியாது தவித்து நின்றவனுக்கு நச்சி என்ற இளைஞனின் நட்புக் கிட்டுகிறது. அடித்தள வர்க்கத்தைச் சேர்ந்த நச்சி எந்தத் தொழில் செய்வதற்கும் அஞ்சாதவன். பேப்பர் ஜல்லி வியாபாரத்தில் சபேசனை ஈடுபடுத்திவிடுகிறான். நச்சிக்கு ஒரு சகோதரி வேதா: அவள் அவனது உடன் பிறந்தவளல்ல. யாரோ ஒரு பெண் சென்ட்ரல் ஸ்டேஷனில் நச்சியின் பொறுப்பில் விட்டுப் போன குழந்தையை வளர்க்கும் பொறுப்பு நச்சிக்கும் அவன் தாயார் கன்னியம்மாளுக்கும் கிடைக்கிறது. வேதா வளர்ந்து உபாத்திமைத் தொழில் பயில்கிறாள். பர்மா அகதி சபேசனிடம் முதன் முதலில் ஒரு ரூபாய் நகரசபையில் வேலை மனுவுக்குக் கடன் கேட்டுப் பெற்ற வேதா அவன் காதலையும் பெறத் துடிக்கிறாள்.

நச்சியின் காதலி ரோஸ்லின் வீட்டில் ஒரு நாள் சபேசன் தங்கும்போது, ரோஸ்லின் தேசிய கீதத்துக்கு உரிய மரியாதை செலுத்தத் தவறுகிறான். அந்த ஆத்திரத்தில் அவள் மீது தட்டை வீசி எறிந்து விட்டு வந்துவிடுகிறான்.

பிறகு சென்னையிலிருந்து தன் சொந்த ஊரான கவுண்டன் பாளையத்துக்கு வந்து விடுகிறான் சபேசன். பெற்ற தாயைப் பறிகொடுத்த செய்தி அவனைத் துயரத்தில் ஆழ்த்துகிறது. இந்தத் துயரத்தை எண்ணிச் சங்கராப்பள்ளம் வந்த சபேசனுக்கு பிறகு வங்காள அகதிப் பெண் சந்தியாவைச் சந்திக்கும் வாய்ப்புகிட்டுகிறது. சந்தியாவின் குடும்பத்தைப் பற்றிய சோகக் கதை அவன் மனத்தை இளகச் செய்ததோடு அவன் உள்ளத்தையும் அவளிடம் பறிகொடுக்கச் செய்து விடுகிறது.

சந்தியாவின் தந்தை அகதி முகாமில் கம்யூனிஸ்ட் காம்ரேட்களின் வலையில் சிக்கியிருப்பதை உணர்ந்து கொள்கிறான் சபேசன். அவர்களது நடவடிக்கை சபேசனுக்குப் புரியாத புதிராக இருக்கிறது.

இனி கதையை மேலே படிக்கலாம்.



## அத்தியாயம் நாற்பத்துமூன்று

# பாரத கீதம்

அகதி வாலிபன் ஆங்கிலமும் வங்க மொழியும் கலந்து பெரியவரிடம் ஏதோ பேசினான். தேநீர் அருந்தச் சொன்னதற்கு அவன் வேண்டாம் என்று மறுத்துப் பேசியது மட்டுமே சபேசனுக்குப் புரிந்தது. வேறு ஒன்றும் புரியவில்லை. ஆயினும் அந்த வாலிபனிடம் சந்தியாவின் தந்தை மிகுந்த மதிப்பும், பயம் கலந்த ஒருவித மரியாதையும் கொண்டிருக்கிறார் என்பதும், அவருடைய முழுப் பெயர் சுரேஷ் சௌத்ரி என்பதையும் ஒருவாறு தெரிந்து கொண்டான். அத்துடன், 'கேரள காம்ரேட் மேனன்' என்ற சொற்கள் அவர்களது பேச்சிலே அடிபட்டதையும் அவன் கவனிக்கத் தவறவில்லை. ஆனால் அந்த அகதி வாலிபனின் பெயரை மட்டும் அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை.

நெடுஞ்சாலையில் ஒரு பஸ் வந்து நின்றது. அதிலிருந்து சொல்லி வைத்தாற்போல் அந்தக் கண்ணாடி அணிந்த மலையாளி கையில் தோல் பையொன்றுடன் இறங்கினார். அவரைத் தொலைவிலேயே கண்டுவிட்ட அகதி வாலிபன் தன்னை மீறிய மகிழ்ச்சிச் சுறுசுறுப்போடு சுரேஷ் சௌத்ரியிடம் ஏதோ சொல்லி விட்டு விரைந்து சென்றான்.

இவ்வளவையும் பார்த்துக் கொண்டு திகைப்புடன் உட்கார்ந்திருந்த சபேசனின் கவனத்தைத் திருப்புவது போல், ''ஏன், தம்பி? இப்போது நீ என்ன உத்தியோகம் பார்க்கிறாய்?'' என்று வெகு அக்கறையாக விசாரித்தார் சௌத்ரி.

''இனிமேல்தான் ஏதாவது வேலை தேட வேண்டும், பாபு!'' என்று எங்கோ யோசனையாகப் பதிலிறுத்தான் சபேசன்.

சுரேஷ் சௌத்ரியிடம் விடைபெற்றுக் கொண்டு எழுந்த சபேசன் சுற்று முற்றும் பார்த்தவாறு மெல்ல நடந்து நெடுஞ்சாலைக்கு வந்தான். தண்ணீர் எடுத்து வரப் போன சந்தியாவிடம் சொல்லிக் கொண்டு புறப்பட வேண்டும் என்பதற்காக மட்டுமல்ல; பஸ்ஸில் வந்து இறங்கிய மலையாளிப் பேர்வழியும் அந்த அகதி வாலிபனும் எங்கே இருக்கிறார்கள் என்பதை அறியவுமே அவன் அங்கு தயங்கி நின்றான்.

இரண்டு தண்ணீர்த் தொட்டிகளண்டையும் சந்தியாவைக் காணோம். அகதி வாலிபனும் மலையாளிப் பேர்வழியும் டீக்கடையில் உட்கார்ந்து சிகரெட் புகைத்தவாறு ஏதோ சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தனர். இப்படி அவர்கள் அடிக்கடி சந்திப்பதும், தனித்துப் போய் உரையாடுவதும் அவனுக்கு உள்ளூற ஒருவித வியப்பை ஊட்டின. ஆயினும் இது தனக்குத் தேவையற்ற விஷயம் என்று எண்ணியவனாய் அவர்களைக் கவனிப்பதை விடுத்து, சந்தியா எங்கே யிருக்கிறாள் என்பதை அறிய அங்குமிங்குமாகத் திரும்பிப் பார்த்தான்.

அந்த அகதி முகாமைக் கண்காணிப்பதற்கென அமர்த்தப்பட்டிருந்த போலீஸ்காரர்களில் சிலர் அவர்களுக்கென்று போடப்பட்ட தனிக் கொட்டகையொன்றில் உட்கார்ந்து தங்களுக்குள் தமாஷாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்ததும் சபேசனுக்குப் பழைய கடற்கரைச் சம்பவம் ஞாபகத்தில் குத்தியது. 'சந்தேகத்துக்கு இடமான வகையில் இங்கு நின்று வீண் தொல்லைகளை விலைக்கு வாங்கிக் கொள்வானேன்? அந்த ஓர் அநுபவமே என் ஜன்மத்துக்கும் போதாதா?' என்று நெஞ்சக் கரிப்புடன் நினைத்த மறுகணமே அங்கிருந்து சரேலெனத் திரும்பி நடக்கலானான்.

நெடுஞ்சாலையைக் கடந்து மீனாட்சி காலனியோரமாகச் சென்ற வண்டிப்பாட்டையில் இறங்கி நடந்த அவன், ''என்ன, என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே புறப்பட்டு விட்டீர்களே!'' என்ற இனிய மென் குரல் கேட்டுச் சட்டென்று நின்றான். அந்தப் பாதையின் மருங்கிலிருந்த புளிய மரமொன்றின் பின்னாலிருந்து வெறுங் குடத்தை இரு கரங்களாலும் தொங்கப் பிடித்தவாறு நாணம் கலந்த மகிழ்ச்சிப் புன்னகையுடன் தயங்கித் தயங்கி வந்தாள் சந்தியா.

வரும்போது இருந்த உற்சாகம் முழுவதையும் இழந்த நிலையில் சோர்ந்து துவண்டு சிந்தனை வயப்பட்டு வந்து கொண்டிருந்த சபேசன், அவளின் இந்த எதிர்பாராத சந்திப்பைக் கண்டு புத்துணர்ச்சி பெற்றவனாய், அகமும் முகமும் மலர ஆவலுடன் நிமிர்ந்தான். ''உன்னிடம் சொல்லிக் கொண்டு கிளம்ப வேண்டுமென்பதற்காகத்தான் இவ்வளவு நேரம் அங்கே காத்துக் கொண்டிருந்தேன். நீ இங்கே வந்து...... ஆமாம்; இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

தன் கவிதைக் கண்களால் அவன் மீது ஒரு கணம் சந்தனத்தை மெழுகிவிட்டுத் தலை குனிந்த சந்தியா, ''என்ன செய்து கொண்டிருந்தேனா?.... வழி மேல் விழி வைத்துக் காத்துக் கொண்டிருந்தேன்!'' என்றாள் தேன் பாகுக் குரலில்.

அவனுக்கு இப்போதுதான் தெரிந்தது, அவள் சற்று முன் தண்ணீர் கொண்டு வரும் சாக்கில் வெளியே வந்தது ஏன் என்று! அடக்க முடியாத சந்தோஷத்தால் அசடு தட்டிப் போன புன்முறுவலுடன், ''ஓ....'' என்று இழுத்தான். ''அப்படியானால் நான் இப்போது புறப்படலாம் அல்லவா?''

முகத்தைத் திருப்பி இடது தோளில் மோவாயை வைத்துக் கொண்டு கள்ளம் ஏலக்கடை விழியால் அவனையே கவனித்துக் கொண்டிருந்த சந்தியா, ''நீங்கள் என் இருப்பிடத்துக்கு வந்தீர்கள்; நான் உங்கள் வீட்டைப் பார்க்க வேண்டாமா?'' என்றாள்.



சென்னை சதர்ன் ரெயில்வே உதவி பிரதம மெக்கானிக்கல் என்ஜினியர் திரு என். எம். அருணாசலத்தின் புதல்வரும் பிலானி, பிர்லா விஞ்ஞான பொறியியல் நுட்பக் கல்லூரியில் இவ்வாண்டு அதிகமான மார்க்குகளுடன் எஞ்ஜினியரிங் பட்டப் பரீட்சையில் சிறப்புடன் தேறிப் பொற் பதக்கமும் பெற்றவருமான திரு ஏ. ரவீந்திரன் காலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் மேலும் உயர் படிப்பும் பட்டமும் பெறுவதற்காக விமான மூலம் சென்ற மாதம் மீனம்பாக்கத்திலிருந்து அமெரிக்காவுக்குப் பயணமானார்.

"தாராளமாக !" என்று இளநகை புரிந்த சபேசன், "ஆனால்...... வெகுதூரம் நடக்க வேண்டியிருக்குமே?" என்றான், தொலைவில் தெரிந்த குருடி மலையைப் பார்த்தவாறு.

"இரண்டு மைல் தூரம் இருக்குமா?... ப்பூ! ஐந்நூறு மைல்களுக்கு மேல் நான் நடந்து பழக்கப்பட்டவள். பாகிஸ்தான் தேசம் இந்த மகத்தான பயிற்சியைக் கூலி வாங்காமலே எங்களுக்குக் கற்றுக் கொடுத்து விட்டது" என்று வெறுப்பு மேவிய அலட்சிய மிடுக்குடன் சொன்ன சந்தியா, குடத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு முன்னால் நடக்கவே ஆரம்பித்தாள். குதூகலம் கலந்த குழப்பத்துடன் அவளைப் பின்தொடர்ந்தான் சபேசன்.

பழைய கவுண்டன்பாளையம் கோயில் இருப்பத்தை அடைந்ததும் சந்தியா தயங்கி நின்றாள். சபேசனும் அவளருகில் நெருங்கினான். கோயிலின் பக்கவாட்டில் பெரியதோர் ஆலமரம் விழுதுகளை ஊன்றிக் கொண்டு நின்றது. அதன் மடியில் யானை, குதிரை, ஐயனார் முதலான மண் சிலைகளும் சிதிலமான கற்சிலைகள் சிலவும் கவனிப்பாரற்றுக் கிடந்தன. கணுக்கால் புதையும் அளவுக்கு உதிர்ந்து மேடிட்டிருந்த ஆலிலைச் சருகுகளின் மேல் ஓசை நயத்துடன் ஒய்யாரமாக நடந்து சென்ற அவள் ஒரு குதிரைச் சிலை மீது சாய்ந்து நின்று கொண்டு பக்கத்திலிருந்த பிரும்மாண்டமான ஐயனாரை வியப்புடன் அண்ணாந்து நோக்கினாள். அவளுடைய அந்த உல்லாசப் போக்கைப் புரிந்து கொள்ள முடியாமல் தயங்கிக் கலங்கி நின்ற சபேசன், அவள் இருந்த இடத்தை நோக்கி மெல்ல நடந்து போய், தரையில் ஊன்றுமல் ஊசலாடிக் கொண்டிருந்த ஒரு விழுதுச் சடையைப் பிடித்துக் கொண்டு அவளையே குறுகுறுவெனப் பார்த்தான்.

ஐயனாரை ரசித்துக் கொண்டிருந்த சந்தியா சட்டென்று திரும்பித் தன் முழங்கையில் ஊர்ந்த ஒரு கட்டெறும்பைத் தேய்த்துத் தள்ளி விட்டு நிமிர்ந்து, "ஆமாம்; என் தந்தை மீது உங்களுக்கு ஏதாவது கோபமா?" என்று இதமாகச் சிரித்தபடியே கேட்டாள்.

"அப்படி ஒன்றுமில்லையே !" என்று முறுவலித்தான் சபேசன்.

"நீங்கள் அங்கிருந்து வந்த நிலையைப் பார்த்தால் அவ்வாறு இருக்குமோ என்று நினைத்தேன்."

'இல்லை' என்பது போல் மீண்டும் பலமாகத் தலையசைத்த சபேசன், 'இதன் பொருட்டுத்தான் என்னைச் சமாதானப் படுத்த இங்கு வந்து காத்திருந்தாள் போலும்' என்று எண்ணி மனம் நெகிழ்ந்தான்.

"அப்படியே நீங்கள் கோபமாக வந்திருந்தாலும் அதற்காக நான் வருந்தியிருக்க மாட்டேன். ஏனென்றால், இந்த விஷயத்தில் எனக்கும் என் தந்தைக்கும் எப்போதுமே தகராறுதான்."

அவன் அவளை வியப்புடன் நோக்கினான்.

"சுதந்திரத்தைப் பற்றியும், தேசத்தைப் பற்றியும் நீங்கள் சொன்ன ஒவ்வொரு சொல்லும் என் இதயத்திலிருந்து வெளிப்பட்டவை போலவே எனக்குத் தோன்றியது. இதே

பாங்கி சிப்பந்தி : தீபாவளி முடைன்னு நல்லாத் தெரியறது ! மெரட்டாதீங்க ! முதலில் அவர்தான் வந்தார் ; அவரைக் கவனிச்சுட்டு அப்புறம் உங்களிடம் வருகிறேன் !

மாதிரி — ஆனால் கொஞ்சம் வித்தியாசமான வார்த்தைகளில் — என் தந்தையிடம் பல முறை நான் இவை பற்றி வாதித்து அவரது கோபத்துக்கு உள்ளாகியிருக்கிறேன்."

ஆவலும் மகிழ்ச்சியுமாக அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் சபேசன். சற்று நேரம் ஏதோ சிந்தனையிலிருந்த சந்தியா துயரம் தோய்ந்த குரலில், "ஆயினும் இதற்காக என் அப்பாவின் மீது குறை கூற முடியாது...." என்று ஏதோ சொல்ல வாயெடுத்தவள் அதைச் சொல்லாமலே தலை குனிந்தாள்.

மெல்லச் சிரித்துக் கொண்ட சபேசன், "அவரைப் பற்றி நானும் அப்படித்தான் நினைத்தேன்" என்றான் அமைதியாக.

"எப்படி நினைத்தீர்கள்?"

"வயதிலும் அநுபவத்திலும் படிப்பிலும் மூத்தவரான அவரது கருத்துக்கு எதிராக இளைஞனை நான் சொன்னதை அவர் உடனே ஒப்புக் கொண்டாரே !"

"ஓ.... அப்படி நினைத்துச் சொல்கிறீர்களா?" என்று தலையாட்டிக் கொண்ட சந்தியா, "ஆனால், ஒரு விஷயம்: அவர் சொன்னதை மறுத்து நீங்கள் கூறியதை ஒப்புக் கொண்டார் அல்லவா? பின்னொரு நாள் வேறு யாராவது இதற்கு மாறாகச் சொன்னாலும் அதையும் உடனே 'சரி' என்று பிடித்துக் கொள்வார்! அது அவருடைய சுபாவம்!" என்றாள் ஒரு குமைச்சலான புன்னகையுடன்.

"ஐயோ, பாவம்!" என்று அநுதாபப் பட்டுக் கொண்ட சபேசன், "என்றைக்கும் நிரந்தரமான உண்மைகளாயிருப்பவற்றையும் சிலர் எதிர்வாதமிட்டு அழிக்கத் துணிகிறார்களே, அவர்களின் அறியாமையை என்னென்பது!" என்று கரகரத்து விட்டுச்



ஊருக்குப் போகும் பெண்ணுக்குத் தாயார் சொன்னது: மாப்பிள்ளை நல்ல டானிக்காக வாங்கிச் சாப்பிடச் சொல்லடி, கமலா! பாவம், பெட்டியைத் தூக்கக்கூடச் சிரமப்படுறார்.

சற்று நேர யோசனைக்குப் பின், ''யாரோ ஒரு காம்ரேடாம் — அவர்தான் அந்தத் தவறான கருத்தை உன் தந்தையிடம் சொன்னாராம்! யார் அந்தப் பிரகஸ்பதி? உனக்கு அவரைத் தெரியுமா?'' என்று கேட்டான்.

சந்தியாவின் முகம் வெளிறியது. பீதியும் வியப்புமாக அவனை ஏறிட்டு நோக்கினாள்.

அதைக் கவனியாத சபேசன், ''நாங்கள் தேநீர் அருந்திக் கொண்டிருந்தபோது வந்தாரே ஒரு வாலிபர், அவராக இருக்குமோ?'' என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்கிறவன் மாதிரி முணுமுணுத்தான்.

சிறுபொழுது மௌனமாயிருந்த சந்தியா, ''நீங்கள் என்ன கேட்கிறீர்கள்? எனக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாது'' என்றாள் உள்ளடங்கிய குரலில்.

அவள் மனத்தைத் தான் ஏதோ ஒரு வகையில் புண்படுத்தி விட்டதாக உணர்ந்த சபேசன் அவளருகில் நெருங்கி, ''சரி நமக்கு ஏன் அந்த வீண் விவகாரம்? இதோடு விட்டு விடுவோம்'' என்றான்.

சந்தியாவின் வதன வாட்டம் இன்னும் நீங்காமலே இருந்தது. இதையறிந்த சபேசன், மெல்லச் சிரித்தபடி, ''ஆமாம்; அன்றொரு நாள் சொன்னாயே, தாகூரின் 'கவி கொய்தலை' மூலத்திலே படித்திருக்கிறேன் என்று. அந்தப் பாடல்கள் அனைத்தும் மனப்பாடம் உண்டா?'' என்று வினவினான்.

அவள் முகம் சற்றே மலர்ந்தது. ''சில பாடல்கள் மட்டுமே தெரியும்'' என்றாள்.

''அவற்றை இசையோடு உனக்குப் பாடவும் தெரியுமா?''

''ஏன்?''

''ஒரே ஒரு பாட்டையாவது அதற்குரிய இசையுடன் கேட்க வேண்டுமென்ற ஆசை!''

''உங்களுக்குப் பாட்டு என்றால் மிகவும் பிடிக்குமா?''

''ஊம்!''

''என்ன பாட்டு? சினிமாப் பாட்டா? அல்லது கர்நாடக, இந்துஸ்தானி, ரவீந்திரசங்கீதங்களா?''

''அதெல்லாம் எனக்குப் பரிச்சயமில்லை.''

''வேறு என்ன பாட்டு?''

சபேசனின் முகம் பளிச்சென்று ஒளிர்ந்தது. ''எனக்குப் பிடித்ததும், எனக்குத் தெரிந்ததும் ஒரே ஒரு பாட்டுத்தான்; அது நம் தேசிய கீதம்!'' என்றான் உணர்ச்சிக் கலவையிட்ட மகிழ்ச்சிக் குரலில்.

சந்தியா அவனை ஆச்சரியத்துடன் நிமிர்ந்து பார்த்தாள். இனிய கனவில் ஆழ்ந்தவன் போல் சிறிது நேரம் பேசாதிருந்த சபேசன், ''உனக்கு அந்தக்கீதம் தெரியுமா, சந்தியா?'' என்று ஆவலுடன் வினவினான்.

ஏளனப் புன்முறுவல் பூத்த சந்தியா, ''என்ன, இப்படிக் கேட்டுவிட்டீர்கள்?'' என்றாள் சற்றே கோபமாக.

''இல்லை; நீ பாகிஸ்தானிலிருந்து வந்திருப்பவளாயிற்றே என்று...''

''அதனாலென்ன? நீங்கள்கூடத்தான் பர்மாவிலிருந்து வந்திருப்பவர்!'' என்று நகைத்தாள் சந்தியா. ''புட்டிப் பால் குடித்து வளரும் குழந்தையேயானாலும் தன் சொந்தத் தாயின் ஸ்தன்ய பானத்தை மறந்துவிடுமா? நான் மூன்று வயதுச் சிறுமியாயிருந்த போதே என் தாய் அந்த அற்புதப் பாடலை எனக்கும் என் சகோதரனுக்கும் சொல்லித் தந்தாள். அது இந்தியாவின் தேசிய கீதமாக அங்கீகரிக்கப்படா முன்பே அவளுக்கு மனப் பாடம்! எவ்வாறெனில் அப்பாடல் நம் மகா கவி தாகூரால் எங்கள் வங்க மொழியில் இயற்றப்பட்டு அவரே அதற்கு இசையும் அமைத்திருந்ததால்!''

மகிழ்ச்சிப் போதையுடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்த சபேசன், ''மன்னிக்க வேண்டும்'' என்று தழுதழுத்தான். ''ஒரு விஷயம்...''

'என்ன' என்பது போல் அவனைக் குறும்பாக நோக்கினாள் சந்தியா.

''அந்த இனிய கீதத்தைத் தவறின்றி முழுமையாக நான் மனனம் செய்து வைத்திருக்கிறேன். நன்றாகப் பாடவும் செய்வேன். ஆனால் அப்பாடலுக்குரிய பொருளை என்னால் முழுதும் அறிய முடியவில்லை. ஏதோ ஊமைத்தனமாகச் சில சொற்களின் பொருள் மட்டுமே புரிந்து கொண்டிருக்கிறேன். இது எனக்கு வெகு நாட்களாகவே பெருங் குறையாக இருக்கிறது. எனவே, தயை செய்து நீ அந்தப் பாரத கீதத்தின் சொந்தக் குருக்குரிய கருத்தை எனக்கு என் மொழியிலேயே எடுத்துச் சொல்லி விளக்கித் தர இயலுமா?''

பசுந்தேன் பூசிய கொவ்வைக் கனி போல் பளபளத்த தன் அதரங்களை நாவின் நுனியால் மெல்ல வருடிக் கொண்ட சந்தியா, ''உங்கள் மொழியில் பெயர்த்துச் சொல்லும் அளவு எனக்குப் பயிற்சி இல்லையே!...'' என்று நாணப் புன்சிரிப்புடன் தயங்கி இழுத்தாள். ''உங்களுக்கு மட்டும்தானே? சரி; முயற்சி பண்ணிப் பார்க்கிறேன்.'' (தொடரும்)



# தவம் எங்கே?

டாக்டர் லக்ஷ்மிக்கும் டாக்டர் கோபாலனுக்கும் கல்யாணம் அமோகமாக நடந்து கொண்டிருந்தது.

லக்ஷ்மி தன் கணவனைப் பார்த்தாள். அவன் அழகன் என்று கூறமுடியாது. சற்று முரட்டுத் தனமாகவே இருப்பான். விவாகம் இல்லாமலே இருந்துவிட வேண்டும் என்பது லக்ஷ்மியின் லட்சியம். மணவாழ்க்கை மனசுக் கிசைந்த வாழ்வுக்கு இடையூறாக இருக்கும் என்பது அவள் அபிப்பிராயம். குழந்தைகளின் வியாதிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து வந்தாள் அவள். அந்தத் துறையிலேயே எவ்வளவோ செய்ய வேண்டும் என்று அவள் கனவு கண்டாள். ஆனால் கடைசியில் பெற்றோரின் உருக்கமான வேண்டுகோளை நிராகரிக்க முடியாமல் கல்யாணத்துக்கு இசைந்தாள். இசைந்தது பெரிதல்ல. டாக்டர் கோபாலன் கிடைத்தது அதிர்ஷ்டம் என்று நினைத்தாள் அவள்.

கோபாலன் பத்து வருடத் தொழில் அனுபவம் உடையவன். அறுவைச் சிகிச்சையில் நிபுணன் என்று பெயர் பெற்றிருந்தான். மிகவும் கண்டிப்பான பேர்வழியாயினும் இளகிய மனமுடையவன் என்று லக்ஷ்மி ஆஸ்பத்திரியில் கேள்விப்பட்டிருந்தாள். லக்ஷ்மியின் பெற்றோர் விசாரித்ததில் கோபாலனின் குடும்பத்தைப் பற்றி மிகவும் திருப்தி கொண்டிருந்தனர். லக்ஷ்மி நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். மெதுவாக வாயில் பக்கம் திரும்பியபோதுதான் ரவியை அவள் பார்க்க நேர்ந்தது.

கோபாலன் லக்ஷ்மி திரும்புவதையும் பார்ப்பதையும் பேசுவதையும் ரசித்துக் கொண்டிருந்தான். மண வாழ்க்கை என்பது ஒரு மனிதனுக்கு அவசியம் என்று நம்பாதவன் அவன். அப்படியிருக்கையில் தன் தாயாரின் ஆசைக்காக இதில் அவன் புகுந்துவிட்டான். கல்யாணமாகாத தன் இரு தங்கைகளுக்கு ஆதரவு தரவும், தாயாரைக் காப்பாற்றவும் ஏற்ற பெண் எங்கே கிடைக்கப் போகிறாள் என்று அவன் ஐயுற்றான். சாமானியக் குடும்பத்தில் பிறந்து, வெகு நாட்கள் கல்யாணமில்லாமல் மனம் சோர்ந்த பெண் ஒருத்திதான் கிடைப்பாள் என்று அவனுக்குத் தெரியும். அத்தகைய ஒரு பெண் விவாகமானவுடன் கணவனிடமிருந்து எத்தனையோ பரிவையும் கவனிப்பையும் எதிர் பார்ப்பாள். அதற்கு அவனால் ஈடு கொடுக்க முடியும் என்று தோன்றவில்லை.

இப்படியிருக்கையில்தான் ஒரு நாள் ஆஸ்பத்திரியின் தீபாவளி விருந்தில் லக்ஷ்மியிடம் அவன் நெருங்கிப் பேச நேர்ந்தது. தன்னைப் போலவே அவளுக்கும் துறவு மனப்பான்மை இருப்பதை அவன் உணர்ந்தான். நட்பு வளர்ந்தது. கடைசியில் இருவரும் திருமணத்துக்குத் தீர்மானித்துவிட்டார்கள். ஆறு வருடங்களாகத் தொழில் பார்த்து வந்தாலும் பள்ளிக்கூடத்தை விட்டு இப்பொழுதுதான் வந்த சிறு பெண்ணைப் போல் இளமையும் அழகும் பொருந்தியவளாக

இருந்தாள் லக்ஷ்மி. திட சித்தமானவள், எடுத்த காரியத்தை நிறைவேற்றும்வரை விடமாட்டாள் என்று அவன் நண்பர்கள் அவளைப் பற்றிப் பாராட்டினார்கள்.

தன் தாயை அவள்தான் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று அவன் கூறினபோது, ''லட்சியத்தோடு கூடிய வாழ்வைத்தான் நான் விரும்புகிறேன். உங்கள் தாயாரைப் பார்த்துக் கொள்வது என் வாழ்வின் குறிக்கோளாக அமையும்'' என்று பளிச்சென்று பதிலளித்தாள் அவள். அவளுடைய ஆராய்ச்சிக்கும் தான் துணையாக இருக்க வேண்டும் என்று கோபாலன் உறுதி பூண்டான்.

''நான் செய்த தவப் பயன் நீ'' என்று கேலியாக அவள் வாயைக் கிண்டினான் அவன்.




''நீங்களும்தான் எனக்கு அப்படி!''

லக்ஷ்மி தன் வலக்கையை ஒரு முறை பார்த்துக் கொண்டாள். ''மணலால் பொம்மை செய்து காட்டுவதுதான் செய்தால் தான் தவமா? செய்கையில்தான் தவறும், மனதில்தான் தவப் பயனும் காணலாம் அல்லவா? நீங்கள்தான் சொல்லுங்கள். இதோ இந்தக் கை குழந்தைகளுக்கு மருந்து போடத்தான் பிறந்தது என்று நினைத்தேன்.''

## தென்னிந்தியர்களின் சுவைக்கேற்றபடி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டது






# ஜி.பி
# பெருங்காயம்

உயர்தர மிஸ்கி கலவை
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 218, சாமுயல் ஸ்ட்ரீட், பம்பாய் 3

ஏஜெண்ட்: தென் இந்தியா
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 203, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, தபால் பெட்டி எண் 1255, மதராஸ்-1

ஏஜெண்டுகள் தேவை—
எல்லா முக்கிய பலசரக்கு கடைகளிலும் கிடைக்கும்.

# மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து நிவாரணம் அடையுங்கள்
—ரண சிகிச்சையையும் தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா! தாங்க முடியாத அரிப்பா! எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா? ரத்தக் கசிவா? உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம் கிடைக்கும்.

படித்த டாக்டர்கள் இருவரும்.

ஆனால் மணமானதும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டது இதுதான்:

"படித்த பெண்ணா நீ? உடை நாகரிகம் உள்ளம் பழங் கர்நாடகம்!"

"படிப்பது பண்பை மறக்கவா?"

அவர்கள் மனக்கசப்புக்குக் காரணம் என்ன?



"இப்பொழுது...."

லக்ஷ்மி திடீரென்று முகம் சிவந்தாள். அதை ரசித்தான் அவள் கணவன்.

கோபாலன் அவள் மோதிரத்தைப் பார்ப்பது போல அவள் கையைத் தொட்டான்.

அவள் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்குள் ரவியைப் பார்த்தாள். ரவி அவளை மணப்பதாக வந்தான். தன் மனதுக்குப் பிடிக்கவில்லை என்று அவள் மறுத்துவிட்டாள். அவன் அவளை ஒரு திமிராகப் பேசிவிட்டு, "நீ எந்த மனிதன் கூடத்தான் வாழப் போகிறாய்!" என்று கூறிவிட்டுப் போனான்.

அப்பொழுது அது பிரமாதமாகத் தோன்றவில்லை. அவன் தன் கல்யாணத்துக்கு வர மாட்டான் என்றே நினைத்தாள் அவள். ஆனால் அவன் வந்து விட்டானே!

ரவி பந்தலில் நுழைந்தவுடனேயே லக்ஷ்மிக்குத் தூக்கிவாரிப் போட்டது. வேண்டுமென்று பழி வாங்கவே வந்தானோ என்கிற மாதிரி இருந்தது அவன் வருகை. வந்தால் தான் என்ன, பார்வையில் என்ன குறும்புத்தனம் வேண்டியிருக்கிறது! அவள் தன் பதற்றத்தை வெளியே காட்ட இஷ்டப்படாமல் கச்சேரியைக் கவனிப்பதுபோல் பாவித்தாள். ஆனால் எத்தனை நேரம்தான் அப்படி இருக்க முடியும்?

"லக்ஷ்மி, இவர்தான் என் நண்பர் ரகுநாதன். அமெரிக்காவில் என்னுடன் இருந்தார்" என்று அவள் கணவன் ஒருவரை அறிமுகப்படுத்தினான்.

லக்ஷ்மிக்கு ஒன்றும் செவியில் விழவில்லை. அவள் வந்தவருக்குக் கையைக் கூப்பினாள்; இயந்திரச் சிரிப்பு ஒன்றைச் சிரித்தாள். அவள் வாய் ஏதோ முணுமுணுத்தது. அவர்கள் தந்த பரிசைப் பின்னாலிருந்தவர்களிடம் ஒப்படைத்துவிட்டு மீண்டும் அமர்ந்தாள்.

"உன் பெற்றோருக்கு என்னவோ பைத்தியம். இப்படியெல்லாம் கல்யாணம் செய்து கொண்டால்தான் கல்யாணமா? என்ன சின்னக் குழந்தைகள் மாதிரி தோப்புக் கரணம் போட்டுக் கொண்டு..." என்று முணுமுணுத்தான் கோபாலன்.

"தினம் தினமும்தான் சாவும் வாழ்வும் பார்த்துப் பார்த்து வைரம் பாய்கிறது நம் வாழ்க்கையில். ஒரு நாள்தான் குழந்தைகளாக இருப்போமே?" லக்ஷ்மி அதைச் சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரித்தாள்.

அந்தச் சிரிப்பு அவள் மனத்தை ஓரளவு இலேசாக்கியது. ரவி ஒன்றும் செய்துவிட முடியாது. ஆனாலும் அவனைக் கண்டதுமே அவள் உடல் எல்லாம் பற்றி எரிந்தது.

அவள் ஓரக் கண்ணால் பார்த்தாள். ரவி சந்தனம், பூச்செண்டு, பன்னீர் எல்லாம் தாண்டிவிட்டான். யாரோ அவனைப் பிடித்துக்கொண்டு விட்டார்கள் பேச. அவர்களை மனமார வாழ்த்தினாள் லக்ஷ்மி.

"லக்ஷ்மி, மகாபலிபுரத்துக்குப் போவது பற்றி உனக்கு ஆட்சேபணை இல்லையே? உன்னைக் கேட்காமலே ஏற்பாடு செய்து விட்டேன்."

"எனக்கு என்ன ஆட்சேபணை? எங்காவது இரண்டு நாட்கள் மறைவாகப் போக வேண்டியதுதான். இங்கிருந்தால் நாளைக் காலை செய்ய வேண்டிய ஆபரேஷனும், மறுநாள் பிறக்க இருக்கும் குழந்தையும்தான் நினைவுக்கு வரும்...!"

"எனக்கும்தான். நான் நாளை ஒரு அபெண்டெக்டாமி செய்ய வேண்டும். மது செய்வான், எனக்குப் பதிலாக."

லக்ஷ்மி புன்முறுவலுடன் ஏதோ பதில் சொல்லத் திரும்பினாள். அவள் முகம் கறுத்தது. ரவி வந்துவிட்டான் அருகில். கோபாலன் துள்ளி எழுந்தான். இரு கைகளாலும் ரவியின் கரங்களைப் பற்றினான். உற்சாகத்துடன் திரும்பி, "லக்ஷ்மி, இதுதான் மிஸ்டர் ரவி. எனக்கு மிகவும் நெருங்கிய நண்பன்" என்று அறிமுகப்படுத்தினான்.

"என் பாராட்டுக்கள் மிஸஸ் கோபால்!" என்று கையை நீட்டினான் ரவி.

லக்ஷ்மி கையைக் கூப்பினாள்.

ரவி நீட்டிய கரத்தை மடக்கவில்லை. "என்ன, லக்ஷ்மி, கைகொடுக்க மாட்டாயா?" என்று குறும்புச் சிரிப்புடன் கேட்டான்.

"லக்ஷ்மி, ரவியை முன்பே தெரியுமா?" என்று கேட்டான் கோபாலன்.

"என் அத்தை மகன் அவன்" என்றாள் அவள், சுருக்கமாக.

"கை கொடு, லக்ஷ்மி" என்றான் ரவி.

"மன்னிக்க வேண்டும்" என்று கூறிக் கையை மீண்டும் கூப்பினாள் லக்ஷ்மி.

கோபாலன் சிறிது அதிருப்தி நிழலாட, லக்ஷ்மியைப் பார்த்தான்.

"அவள் ஏன் கை கொடுக்க மாட்டேன் என்கிறாள் தெரியுமா கோபு? நான்தானே கைப்பிடித்திருக்க வேண்டிய அத்தான்? நான் காத்திருந்தவன், நீ நேற்று வந்தவன்" என்று கூறிவிட்டுச் சிரித்தான் ரவி.

லக்ஷ்மிக்கு அவன் சிரிப்பு அருவருப்பாக இருந்தது. நான்கு நாட்களுக்கு முன் வீட்டுக்கு வந்திருந்தானே, தன்னை மணக்கவில்லை என்று ரசக் குறைவாகப் பேசினான். அதெல்லாம் அவளுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. கல்யாணத்துக்கு வர மாட்டான் என்றே அவள் நினைத்தாள். கணவனின் நண்பனாக வந்து நிற்பான் என்று தெரியாது அவளுக்கு.

ரவி கோபாலனுடன் பேசினான். அடிக்கடி லக்ஷ்மி பக்கம் திரும்பிப் பேசினான். லக்ஷ்மி சலனமின்றி அமர்ந்திருந்தாள். மேலே மேலே விருந்தினர்கள் வரவும் இருவருக்கும் சரியாக இருந்தது. அவர்களது ஆஸ்பத்திரியில் இருவருமே நல்ல செல்வாக்குடையவர்கள். சிகிச்சை செய்து கொண்டவர்களும், சக

டாக்டர்களும் அவர்களிடம் படித்த மாணவர்களும், நர்ஸ்களுமாகக் கல்யாணப் பந்தல் 'ஜே ஜே' என்று இருந்தது. வரவேற்பு முடிந்தது. சாப்பாடு முடிந்து லக்ஷ்மி உடை மாற்ற மாடிக்குச் சென்றபோது கோபாலன் தாழ்வாரத்தில் கைப்பிடிச் சுவரின் மீது சாய்ந்த வண்ணம் தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் காலரவம் கேட்டு, ''லக்ஷ்மி!'' என்று அழைத்தான்.

''என்ன?''

''இன்று நீ என்னை அவமானப்படுத்தி விட்டாய்.''

''நானா?'' வியப்புடன் கேட்டாள் லக்ஷ்மி.

''ஆமாம். ஒரு சமயம் எனக்கு வயிற்று வலி வந்து படுத்திருந்தேன். ரவிதான் இராப்பகலாக எனக்குப் பணிவிடை செய்து என்னைக் காப்பாற்றினான். அவன் முகத்தில் அறைந்தாற்போல் நீ கை கொடுக்க மாட்டேன் என்றாயே?''

கோபாலன் முன்கோபக்காரன் என்பது பிரசித்தம். கல்யாணத்தன்றே அத்துடன் போராட வேண்டி வரும் என்று அவள் எதிர்பார்க்காததால் சிறிது தயங்கினாள்.

''என்ன லக்ஷ்மி? திருமணத்தன்றே நம்மிடையே அபிப்பிராய பேதம் வந்துவிட்டதே என்று நினைக்கிறாயா?''

''அப்படியொன்றும் இல்லை'' என்றாள் லக்ஷ்மி.

''நான் அப்படித்தான் நினைக்கிறேன், லக்ஷ்மி. என்னுடைய நெருங்கிய நண்பன் என்று சொன்ன பிறகும் கூட நீ மறுத்திருக்க வேண்டாம். என்னைப் பற்றி என்ன நினைத்திருக்க மாட்டான் அவன்?''

''மதிப்புக் குறைவாக நினைத்திருப்பான் என்கிறீர்களாக்கும்?''

''இல்லையா? மனைவியிடம் இந்த அளவு கூட மதிப்புப் பெறாதவன் என்று தொனிக்கும்படி பேசிவிட்டுத்தான் போனான்.''

''அவன் அபிப்பிராயம் என்ன, பெரிய உலக மேதையின் மதிப்பீடா? அவனை எனக்கு நன்றாகத் தெரியும்? கிடக்கிறான்-அவன்'' என்று அலட்சியமாகப் பதில் தந்து விட்டு லக்ஷ்மி அப்பால் நகர்ந்து விட்டாள். கோபாலனைத் திரும்பிப் பார்த்தால் அவள் கலவரமடைந்திருப்பாள். பாராததனால் நிம்மதியாக ஒரு பாட்டை முனகியவாறு அவள் உடை மாற்றிக் கொண்டு கீழே போய் விட்டாள்.

கோபாலன் கொஞ்ச நேரம் அங்கு நின்று விட்டுத் தன் வீட்டினர் இருக்கும் விடுதிக்குப் போய் விட்டான்.

மறுநாள் விடியற்காலையிலேயே கல்யாணத்தின் மீது விவகாரங்கள் ஆரம்பித்தன. லக்ஷ்மி அவனைப் பார்த்ததும் திடுக்கிட்டாள். ஓர் இரவுக்குள் அவன் உருவமே மாறி விட்டது போன்ற பிரமை தட்டியது. அப்படி என்ன விபரீதம் நடந்து விட்டது என்று அவளுக்குப் புரியவில்லை.

மணையில் வேலை முடிந்ததும் மூதாட்டிகள் சிலர் பாலிகையை எடுத்துக்கொண்டு கிளம்பினார்கள். அதுவரை லக்ஷ்மியும் கோபாலனும் சோபாவில் அமர்ந்திருந்தார்கள்.

''மகாபலிபுரம் போவதை நிறுத்தி விட்டேன்'' என்றான் கோபாலன்.

''ஏன்?'' என்று கேட்டாள் லக்ஷ்மி.

''மனசில ஒற்றுமை இல்லாதவர்கள், பரஸ்பரம் மதிப்பில்லாதவர்கள் போக வேண்டிய இடமும் இல்லை; சந்தர்ப்பமும் இல்லை.''

லக்ஷ்மி இலேசாகச் சிரித்தாள். ''நீங்கள் அவ்வளவு கோபம் கொள்ளும்படி அப்படி என்ன நடந்து விட்டது?''

''ஒரு பானைச் சோற்றுக்கு ஒவ்வொரு சோற்றையும் பதம் பார்க்க வேண்டுமா?''

''ரவியின் விஷயத்துக்காக நீங்கள் இவ்வளவு கோபம் கொள்ளக் கூடாது. இந்தக் கை உங்களுடையது. அந்தப் புனிதமான கையை வேறு யாருக்கும் கொடுக்க நான் மனம் ஒப்பவில்லை. அதிலும் ரவிக்கு; அதிலும் நீங்கள் கட்டிய கங்கணக் கயிறு இருக்கும் போதே...!''

''அவன் என்ன அவ்வளவு தவறு செய்து விட்டானாம்?''

''பிறனுடைய மனைவியான பிறகும் மட்டமாகப் பேசியதுதான்.''

''ஆகா! பெரிய ராஜபுத்திர பதிவிரதா சிரோமணி நீ!''

''என் கற்பைப் பழிக்காதீர்கள்! ரவிக்காக அந்தமட்டும் கீழே இறங்க வேண்டாம்.''

''நீ ஆடவன் கையையே தொடாத கற்பரசியா? ஆஸ்பத்திரியில் ஆடவர்களையே ஸ்பரிசிக்காத புனித மாதாவா?''

''அது வேறு விஷயம்.''

''அன்று ஒரு நாள் டீபார்ட்டியில் டாக்டர் ஆர்வல் உன் கன்னத்தை கிள்ளினார்.. அன்று நீ ரசித்து இளித்ததை நான் பார்க்கவில்லையாக்கும்!''

''இதோ பாருங்கள். கைக்குக் கை வித்தியாசம் இருக்கிறது. நான் நோயாளிகளைத் தொடும்போது ஒரு தாய் குழந்தையைத் தொடுவது போல் தொடுகிறேன்; ஒரு கலைஞன் கலைப்பொருளைத் தொடுவது போலத் தொடுகிறேன்; ஓர் இயந்திரம் மற்றோர் இயந்திரத்தை இயக்குவது போல் அது. இதையெல்லாம் உங்களுக்கு நான் சொல்ல வேண்டுமா? ஆர்வல் என் கன்னத்தைத் தொட்டது உண்மை. நான் அதை எதிர்பார்க்கவில்லை. அவர் ஒரு கிழவர். தகப்பன் என்ற முறையில் கிள்ளினார். மேலும் அவர் ஓர் ஐரோப்பியர். பிற பெண்களைத் தொடுவது அவர்கள் பண்புக்கு முரணல்ல. ஆயின், அதை நான் ரசித்தேன் என்கிறீர்களே, அது சரியில்லை. எனக்குப் பிடிப்பதில்லை. அநாவசியமாக எந்த அன்னிய ஆடவன் கையையும் தொடுவதற்கு நான் விரும்புவதில்லை.''

''படித்த பெண்ணு நீ! உடை நாகரிகம், உள்ளம் படு கர்நாடகம்!''

''படிப்பது பண்பை மறக்கவா?''

பேச்சு இதே ரீதியில் தடித்துக்கொண்டே போயிற்று. இருவருமே தங்கள் முக பாவத்தைச் சமாளித்தபடியே பேசியதால் மற்றவர்கள் அதை அறிய முடியவில்லை.

நடு நடுவில் அவர்களை உறவினர்கள் சூழ்ந்து கொண்டனர். அவர்களுடன் பேசவேண்டிய நிர்ப்பந்தங்களினால் அவர்கள் சண்டை சிறிது தடைபட்டது.

பாலிகையுடன் இரண்டு மாமிகள் கிளம்பினார்கள். இவர்களையும் கூட அழைத்தனர். லக்ஷ்மியும் கோபாலனும் கனத்த இதயத்துடன் கிளம்பினார்கள். கோவில் குளத்தில்

"அதைவிட நீங்கள்
கோயம்புத்தூர் காட்டன்
மில்ஸ் லாங் கிளாத்
வாங்கினாலென்ன?."





**The Coimbatore Cotton Mills Ltd.—Coimbatore**
Selling Agents:
**Murali & Co., P.B. No. 133—Coimbatore**

*LPE-Aiyars-M/CCM-2*

---

# அக்ரிமெண்ட்

சீழ்ப் பிடிக்காமல் தடுக்கும் பல்வகை உபயோக மெழுகு
உடன் நிவாரணமும், விரைவில் குணமும் பெற

- கறையுண்டாக்காதது
- பிசுக்கில்லாதது
- ஹானியற்றது, இதமளிப்பது, குழந்தைகளுக்கும் உபயோகிக்கத் தகுந்தது.






TCP-81 & TM

இது ஒரு பெங்கால் இம்யூனிடி தயாரிப்பு




# ஸிக்னல்

## கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் தரித்தது!*

## துலக்கிய வாய் முழுதும் தூய்மை நிலவும்!

**❶ உங்கள் பற்களைத் துலக்கும் ❷ துலக்கிய வாய் மணக்கும்.**

* அந்தச் சிவப்பு வரிகளிலே இருப்பது ஹெக்ஸாக்ளோரபீன்.

பற்களின் துப்புரவுக்கு ஒரு புதிய உறவு: கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் கூடிய ஸிக்னல்: வாய் நிரம்பும் தூய்மைக்கென்றே வாய்த்த ஒரு பற்பசை. பற்களைத் துலக்கும்போதே, உங்கள் மூச்சையும் மணமுடன் தூய்மைப்படுத்துகிறது அவ் வரிகளிலுள்ள ஹெக்ஸாக்ளோரபீன். காரணமா? நாற்றமுண்டாக்கும் கிருமிகளை உடனடியாக ஒழிக்கவல்ல பாதுகாப்புப் பொருளே ஹெக்ஸாக்ளோரபீன். எனவே, ஸிக்னல் தேய்த்த வாய் முழுதும் தூய்மையின் ஆட்சி. கோலச் செவ்வரிகள், சொப்பளிக்கும் நுரைவளம், குளுகுளு பெப்பர்மின்டுப்போன்ற சுவை... ஆஹா! நறுமணம் குடும்பத்திலுள்ள எவரைத்தான் கொள்ளை கொள்ளாது? வாய் முழுமையும் தூய்மையோ தூய்மை, வாயார உணரலாம். இன்றே பெறுங்கள் ஸிக்னல்.




லின்டாஸ்-SG. 3A-140 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமானதொரு தயாரிப்

பாலிகை கரைக்கப்பட்டது. இருவரும் மௌனமாகக் கரையில் அமர்ந்திருந்தனர்.

''என்ன ஆழ்ந்த யோசனை?'' என்ற குரலைக் கேட்டு இருவரும் திரும்பினார்கள்.

''நாளை செய்ய வேண்டிய ஆபரேஷனைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன்'' என்றாள் லக்ஷ்மி.

''சின்ன டி. என். ஸி.க்கு என்ன, யார் வேண்டுமானாலும் செய்ய மாட்டார்களா?''

''எல்லோருக்குமே டாக்டர் மது கிடைப்பார்களா?'' என்றாள் லக்ஷ்மி.

''அதற்காக உங்கள் ஆஸ்பத்திரி நினைவையும், மருந்து வாசனையையும் கூட மகாபலிபுரத்துக்கு எடுத்துக் கொண்டு போனீர்களா? போஷ்!'' என்று சிரித்தான் டாக்டர் மது.

''மது! நாங்கள் எங்கும் போகவில்லை.''

''ஏன், கோபால்? என்னிடம் நம்பிக்கை இல்லையா?''

''அதற்காக அல்ல. வேறு காரணம்...!''

''என்ன டாக்டர் லக்ஷ்மி?''

''மணமானவர்கள் மனம் பலவிதமாக மாறும். உங்களுக்கு என்ன புரியப் போகிறது? அடுத்த மாதம் உங்கள் கிதா வரட்டும். அப்புறம் சொல்கிறேன்'' என்று அவனிடம் வேடிக்கையாகப் பேசினாள் லக்ஷ்மி.

''ரைட்டோ'' என்று சிரித்துப் பேசிவிட்டு மதுசூதன் போய்விட்டான்.

''லக்ஷ்மி, பெரிய தவறு செய்துவிட்டோம். இனித் தொடர்ந்து நடத்துவதில் பயனில்லை'' என்றான் கோபாலன்.

''சரிதான். எதுவானாலும் இந்த நிமிஷமே முடிவு செய்ய முடியுமா? ஊருக்காக, உற்றாருக்காகக் கொஞ்சம் நாடகம் போட வேண்டாமா?''

''வாருங்கள், கோவிலுக்குள் போய் அர்ச்சனை செய்து வருவோம்'' என்று ஓர் அம்மாள் அழைத்தாள். கோபாலன் லக்ஷ்மியைப் பார்த்தான். லக்ஷ்மியும் திரும்பிப் பார்த்தாள். மற்றவர்களுக்கு இவர்கள் சங்கடம் தெரியாதபடியால் அவர்கள் துரிதப்படுத்தினார்கள். இருவரும் வேறு வழியின்றி உள்ளே சென்றார்கள். இருவர் பெயரையும் நட்சத்திரங்களையும் கேட்டுக் குருக்கள் அர்ச்சனை செய்தார்.

''இதுதான் முதலும், கடைசியுமா?'' என்று கேட்டான் கோபாலன்.

''இருக்கலாம்'' என்றாள் லக்ஷ்மி.

''நான் எந்தப் பெண்ணின் கையையும் தொடக் கூடாது என்று நிபந்தனை உண்டா?'' என்று கேட்டான் கோபாலன், ஆத்திரத்தை அடக்க மாட்டாமல்.

''என் கொள்கையைத் தெளிவாகச் சொல்லி விட்டேன். ஒரு மனிதனுடைய ஸ்பரிசத்துக்கும் பொருள் இருக்கத்தான் வேண்டும். அர்த்தமின்றித் தொட்டுக் கொள்வது மிருகப் பிராயமல்லவா? அதைப் பற்றி இப்பொழுது என்ன? முதலும் கடைசியும் இதுவே என்று கூறி விட்டீர்களே?''

''நீயும்தான் 'இருக்கலாம்' என்கிறாயே?''

லக்ஷ்மி செவிசாய்க்கவே இல்லை. உள்ளே உள்ள மூல விக்கிரகத்தைப் பார்த்தாள். அவள் முகத்திலும் பிடிவாதம் உறைந்திருந்தது. கோபாலனின் முகத்திலும் கடுமையிருந்தது.



''அண்ணே! நான், தீபாவளி ரிலீஸ். நீ?''
''பொங்கல் ரிலீஸ்தான்!''

''ஏன் இரண்டு பேரும் முகத்தைக் கடுகடு வென்று வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கோபாலனின் சித்தி கேட்டாள்.

''வெய்யில்'' என்றாள் லக்ஷ்மி.

''வெய்யிலா, வெப்பமா?'' என்று கேட்டான் கோபாலன்.

''கொதிப்பு.''

'' எப்பொழுது மகாபலிபுரம் ஸெம்பப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள் சித்தி.

''போகப் போகிறதில்லை: இங்கே முக்கியமான வேலை இருக்கிறது. லீவு கிடைக்காது.''

''அழகுதான்!'' என்றாள் சித்தி.

லக்ஷ்மி முன்னேறுவதிலேயே கண்ணுயிருந்தாள்.

அன்று ஒரு மகாராஜாவின் வருகைக்காக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. லக்ஷ்மி வேகமாகச் சென்ற போது கீழே விழுந்திருந்த தாம்புக் கயிற்றைப் பார்க்கவில்லை. சட்டென்று தடுக்கி விழவிருந்தாள். கோபாலன் அவளைப் பிடித்து நிறுத்தினான்.

''தாங்க்ஸ்'' என்றாள் லக்ஷ்மி.

''வேண்டாதவர்கள் கைதொடப் பிடிக்காது என்பது மறந்து விட்டது'' என்றான் ஏளனமாக.

''முதலும் கடைசியுமாக இருக்கும்போது ஞாபகத்துக்கு வேலையில்லை'' என்றாள் லக்ஷ்மி கூடச் சுட.

''கை என்பது பிணைக்க உதவும் என்று நினைத்தேன் நான்.'' எளக்காரம் தொனித்தது கோபாலனின் ஒவ்வொரு பேச்சிலும்.

''பிளப்பதற்கும் அதுவே பயன்படுகிறது: அவரவர்கள் மனதைப் பொறுத்தது.''

மேலே நடந்து செல்ல முடியாமல் கயிறு குறுக்கேயும் நெடுக்கேயும் ஓடியது. அவர்களுடன் வந்த மூதாட்டிகள் தாண்டிவிட்டிருந்தனர். இவர்கள் இருவர் மட்டும் மண்டபத்தில் நின்றுவிட நேர்ந்தது.

லக்ஷ்மியின் மனத்தில் வேதனை நிரம்பியது. அவள் தன் பெற்றோருக்கு ஒரே பெண். அவள் திருமணம் செய்துகொள்வதைப் பற்றி அவர்கள் என்னதான் சந்தோஷம் அடைந்திருப்பார்கள் என்பது சொல்ல முடி




டாக்டர்: இவ்வளவு நேரம் பொறுத்துக் கொண்டிருந்தேன். இனிமேல் பேசினால் உன்னை...உன்னை...!

வந்தவர்: ...கொன்று விடுவேன் என்கிறீரா? அது நடக்காது. நான் உங்க 'பேஷண்ட்' இல்லை.

---

யாதது. மோன ஓசை அடங்குவதற்குள்ளாகவே அங்கு முரண்பாடு தோன்றிவிட்டது. கோபாலனின் முன்கோபமும் பிடிவாதமும் தெரிந்தவைதான். ஆனாலும் தான் பிடித்ததற்கு எதிரே ஒன்றுமே சொல்லக் கூடாது என்று அவன் எதிர்பார்ப்பது மிகவும் அநீதியாக அவளுக்குத் தோன்றியது. அவனைப் போலவே படித்த ஒரு பெண், உலகம் அறிந்தவள், சில கொள்கைகளை வைத்திருப்பாள், அவைகளுக்கும் மதிப்புத் தரவேண்டுமல்லவா? பரஸ்பரம் அன்பும் மரியாதையும் இல்லாமல் எப்படி வாழ முடியும்? அதுவும் வைத்தியத் தொழிலிலேயே ஈடுபட்டிருக்கும் இருவர். நோயாளிகளின் மனசை அறிந்து சிகிச்சை செய்ய வேண்டிய இருவர், ஒருவரையொருவர் புரிந்துகொள்ளவே மறுத்தால்...? நல்ல காலம், இன்றே வந்ததே மனஸ்தாபம். ஆனாலும்தான் என்ன? பெற்றோர்கள் எவ்வாறு இடிந்து போய் விடுவார்கள்! ரவியின் குறுக்கீட்டினால் வாழ்க்கையைக் கெட விடுவது சரியா?

கோபாலன் தன் புது மனைவியைப் பார்த்தான். அழகாக இருக்கிறாள். புத்திசாலி என்று பெயர் வாங்கியவள்தான். சிலர் சொல்லியிருக்கிறார்கள் — அவள் சில கொள்கைகளை உடையவள், அதற்காக யாரையும் லட்சியம் செய்யாமல் ஒரே பிடியில் நிற்பாள் என்று. என்ன இருந்தாலும் மணவாழ்க்கை என்று ஏற்றுக் கொண்ட பிறகு கணவனை சந்தோஷப்படுத்த வேண்டும் என்ற எண்ணமே இல்லாத பெண் என்ன பெண்! பண்ணைப் பற்றி இவளுக்குத்தான் தெரியுமா? சரி, வாக்குவாதம்தான் ஆகிவிட்டது. என்றாலும் பிறகாவது கொஞ்சம் வளையக் கூடாது? அலட்சியமாக இருக்கிறாளே? லட்சியமில்லாத பெண்ணுடன் என்ன வாழ்வு வாழ முடியும்? கடைசியும் முதலும் என்று ஓர் ஆடவன் குறிப்பிட்டால் அவளும் அதை ஆமோதிக்கிறாளே யன்றிக் கவலைப்படவில்லையே! நல்ல காலம்! இன்றே தெரிந்து விட்டதே! வாழ்க்கை ஆரம்பித்த பிறகு தவிக்காமல் தவிர்த்ததே! ஆனாலும் அவ்வளவு எளிதில் முடிகிறதா? வயதான தாய் இந்த தன்னுடைய ஆவலோடு எதிர்நோக்கிக் காத்திருந்தாள். கண் தெரியாத தாய்க்கும், சிறுமிகளான தங்கைகளுக்கும் லக்ஷ்மி ஆதரவாக இருப்பாள் என்று கேட்டுப் பேசித் தெளிந்து மண வாழ்க்கையில் இறங்கியதில் என்ன பயன்? அவள் கொள்கை பழமையானதுதான். நாட்டுப் பண்ணைப் போற்றுவது குற்றமாகுமா? ரவியின் பேச்சும் சிறிது அநாகரிகமாகத்தான் இருந்தது.

இருவரும் தத்தம் சிந்தனையில் சிக்கி, பின்னலை விடுவிக்க வழி தெரியாமல் தவித்தனர்.

இரண்டு பெரிய உருளைகளிலிருந்து ஆட்கள் கயிற்றை விடுவித்துக் கொண்டிருந்தனர். வேறு பலர் அக்கயிற்றைக் கொண்டு ஆங்காங்கு பின்னல்கள் உண்டாக்க முயன்று கொண்டிருந்தனர். லக்ஷ்மியும் அதையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவர்கள் வேலை எளிதில் ஆவதாக இல்லை. தாங்கள் நின்ற மண்டபத்தில் கயிறு கட்டி முடித்ததும் கிளம்ப நினைத்தான் கோபாலன். லக்ஷ்மியும் பொறுமையின்றித் தவித்தாள்.

கயிறு கட்டுபவர்களிடையே பலத்த வாக்குவாதம் வந்துவிட்டது.

"அடே எந்த முட்டாளடா அது? ஒரே சக்கரத்திலிருந்து விடுகிறான்? இரண்டு பக்கத்திலிருந்தும் விட்டால் கூட்டம் அழுத்தினாலும் தாக்குப் பிடிக்கும். இப்படிக் கட்டினால் ஓரிடத்திலே அவிழ்ந்தால் மொத்தப் பேரும் விழ வேண்டியதுதான்" என்று மேஸ்திரியின் கூச்சல் கேட்டது.

லக்ஷ்மி கோபாலனின் முகத்தை உன்னிப்பாக நோக்கினாள். அவனும் அந்தச் சமயம் அவளைப் பார்த்தான்.

"யாரு, டாக்டர் ஐயாவும் அம்மாவுங்களா? நேற்று கல்யாணத்துக்கு வர முடியலீங்க. இங்கே வேலை சரியா யிருக்கிறது பாருங்க. இவனுகளுக்குக் கயிறு கட்டக் கூடத் தெரியலில்லே. ஒருத்தன் கயிற்றையே இழுத்துப் போதும் போதாமல் முடி போடுறாங்க. மற்றக் கோடியிலிருந்து கொஞ்சம் இழுத்துத் தாராளமா முடி போட்டால் என்ன? இரண்டு பேரும் பாதி வழி பிடிகொடுத்தால் தானே? அதுகூட இந்த முட்டாப் பசங்களுக்குச் சொல்லணுமுங்க" என்றான் மேஸ்திரி.

கொஞ்சம் இடைவெளி தோன்றவும் லக்ஷ்மி கீழே இறங்கிக் கிளம்பினாள். மறுபடியும் விழுந்துவிடப் போகிறோமே என்று கயிற்றுச் சுருள்களுக்கிடையே மெதுவாகக் காலை எடுத்து வைத்து முன்னேறினாள். கோபாலனும் கூடவே வந்தான். லக்ஷ்மி கையை நீட்டித் தூணைப் பிடிக்கப் போனாள். அதே சமயம் அவள் கையைக் கோபாலன் பிடித்தான். லக்ஷ்மி அமைதியாகக் கணவனைப் பார்த்தாள். கோபாலனும் நிதானித்துப் பார்வையைத் திருப்பினான்.

"நான் பாதி வழி வந்துவிட்டேன் லக்ஷ்மி!" என்றான் கோபாலன்.

"நான்தான் முதலில் கையை நீட்டினேன்" என்றாள் லக்ஷ்மி.

"நீ தூணைப் பிடிக்கப் பார்த்தாய்."

"இந்தத் தூணைத்தான்" என்று தன் கணவனின் கையை அழுத்தினாள் அவள்.

"நானும் இந்தக் கொடியைப் பிடிக்கப் பிடியைத் தளர்த்தினேன்" என்றான் அவன்.

உச்சிக்கால மணி அவர்கள் தெளிவைத் தெளிவாக ஆமோதித்தது.



# சுவாமி கொடுத்த அணுகுண்டு

## கி.ரா

நலிந்து வாழும் தாய்க்கு ஒரே செல்வன். செல்வனுடைய வயது ஐந்து. தந்தையை விட்டு விலகி வாழும் தாயை ஆதரிப்போர் எவரும் இல்லை. தாய் சில பெரிய தனவந்தர்களுடைய இல்லத்தில் சென்று கூலி வேலை செய்து, வயிறு வளர்த்து, தன்னுடைய செல்வனையும் வளர்த்து வந்தாள்.

தீபாவளிக்கு முந்திய தினம்.

செல்வன் தாயை வேண்டினான்: "அம்மா! எனக்கு இன்று பெரிய ஆனை வெடியும், அணுகுண்டும் வாங்கித் தரணும்! தெருவிலே எல்லாப் பையன்களும் வாங்கி விட்டாங்க, அம்மா! வாங்கித் தரயா?"

தாய் தினசரி நான்கு வீடுகள் நுழைந்து வேண்டிய கூலியைப் பெற்று வயிறு கழுவுவதே கஷ்டமாய் உள்ள நிலையில் அணுகுண்டுக்கும், ஆனை வெடிக்கும் எங்கே போவது? செல்வனோ விவரம் தெரியாத குழந்தை. தெருவில் விளையாடும் பருவம். கண்ணால் காண்பதை விரும்பிக் கேட்கும் இளங் குழந்தை. தான் எப்படியாவது ஆனை வெடியும் அணுகுண்டும் வாங்கித் தருவதாய்க் கூறிச் செல்வனைச் சமாதானப்படுத்தினாள். செல்வன் தாய் சொன்ன சொல்லை நம்பி உற்சாகத்துடன் வெளியில் சென்று, தனக்குக் கிடைக்கப் போகும் அணுகுண்டையும், ஆனை வெடியையும் பற்றிப் பெருமையாய்ப் பேசிக் கொண்டேயிருந்தான்.

அன்று இரவு.

செல்வனுடைய தாய் தான் கூலி பெற வேண்டிய இல்லங்களுக்குச் சென்று, அந்தப் பணத்துக்கு ஓர் அணுகுண்டும், ஆனைவெடியும் வாங்கி வர எண்ணிச் சென்றாள். மொத்தம் நான்கு இல்லங்களில், இரண்டு பேர்கள் இல்லையென்று, தீபாவளியைக் காட்டிக் கைவிரித்து விட்டார்கள். ஒருவர் மட்டும் ஒன்பது ரூபாய் கொடுக்க வேண்டியதற்கு இரண்டரை ரூபாய் கொடுத்துவிட்டு மீதியை அடுத்த வாரம் தருவதாய்ச் சொல்லியனுப்பி விட்டார்கள். நான்காவது இல்லத்தில் தாயை உள்ளே விடவே மறுத்துவிட்டார்கள். காரணம், அவர்களுடைய செல்வியின் தலைதீபாவளி அது. செல்வியை அழைத்துக் கொண்டு மாப்பிள்ளை வந்து விட்டதால், இல்லம் முழுதும் ஒரே கோலாகலமாய் இருந்தது. தீபாவளிக்கு வேண்டிய ஜவுளிகள், இன்பண்டங்கள், வெடி வகைகள், இந்தச் செலவின் தொகை கணக்கு வழக்கு இன்றி ஏறிவிட்டதால் சமையல் கூலியை எப்படிக் கணக்குப் பார்த்துத் தீர்க்க முடியும்? தாயார் இரண்டரை ரூபாயுடன் வீடு திரும்ப வேண்டியதாயிற்று.

கடை வீதியில் வரும்போது கடைக்குக் கடை தீபாவளிப் பட்டாசுகளை அலங்காரமாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. தாய் தன் செல்வனுடைய விருப்பத்தை நிறைவேற்ற விரும்பி, ஒரு கடையில் நுழைந்து, "அணு குண்டு என்ன விலை?" என்று கேட்டாள்.

"ஒன்று நாலரை ரூபாய்" என்றான் கடைக்காரன்.

"ஆனை வெடி?"

"இரண்டு ரூபாய்க்கு மூன்று."

தாய் சற்றுச் சிந்தித்தாள். ஆனைவெடியை வாங்கிவிடலாமா? இரண்டு ரூபாய்க்கு ஆனை வெடியை வாங்கிச் சென்றால், நாளைக்குத்

சாப்பாடு? செல்வன் காங்குவானே? செல்வனுடைய திருப்தியை எண்ணி நான் நாளை பட்டினி கிடக்கலாம். செல்வனையும் பட்டினி போடலாமா ?......

பெரும் போராட்டம். முடிவு: தாய் இரண்டு ரூபாய்க்குத் தேவையான அரிசி, துவரம் பருப்பு, காப்பிப் பொடி இவைகளை மட்டும் வாங்கிக் கொண்டு வந்து இல்லம் சேர்ந்தாள்.

தாய் வருவதைக் கண்ட செல்வன், விளையாடிக் கொண்டிருந்தவன், ஓடி வந்து தாயின் காலைக் கட்டி மறித்துக் கேட்டான்:

''அணுகுண்டு எங்கே அம்மா?''

தாய் பதில் சொல்லாமல் மௌனியாய் உள்ளே நுழைந்தாள். செல்வனும், தொடர்ந்து நுழைந்து. தாயின் சேலைத் தலைப்பைப் பற்றிக் கொண்டே கேட்டான் :

''அம்மா ! அணுகுண்டு அம்மா! கொடு அம்மா ! நான் கண்ணாலே பார்த்துட்டுக் கொடுத்துடறேன்!''

குழந்தையின் கெஞ்சும் மொழிகள் தாயின் நெஞ்சில் கடப்பாறையால் தாக்குவதைப் போல் ஒலித்தன. செல்வனை எப்படிச் சமாதானப்படுத்துவது ?

''ராமு!'' என்று அழைத்தாள் தாயார். வேறு ஒரு சொல்லும் வெளி வரவில்லை. நெஞ்சில் நிறைந்த துன்ப உணர்ச்சியைத் தாங்கச் சக்தி இன்றி, செல்வனை இரு கைகளாலும் வாரி எடுத்து, நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொண்டு, ''ராமு! ராமு !'' என்ற ஒரே சொல்லையே திரும்பத் திரும்பக் கூறி, அழுதுகொண்டே யிருந்தாள். வேறு என்ன சொல்வது?.... அணுகுண்டு வாங்கும் தொகை இல்லை. ஆனைவெடி வாங்கி யிருக்கலாம்...... ஆனைவெடி பெரிதா, வயிற்றுச் சாப்பாடு பெரிதா?.... செல்வனுடைய இள நெஞ்சில் வயிற்றுச் சாப்பாட்டையும், ஆனை வெடியையும் எடை போட்டுப் பார்க்க வழி இருந்தால், ஆனை வெடியே பெரிது என்பதை அறியலாம். பெற்ற தாய்க்குச் செல்வனுடைய உணவுதான் பெரிது என்பதில் சந்தேகம் இல்லை......

ஆனை வெடிகூட இல்லை என்று அறிந்ததும் செல்வனுடைய நெஞ்சில் எழுந்த பெரும் புயலைப் போன்ற துன்பத்துக்கு இணையானது, இந்த உலகில், வேறு எங்கும் உவமை காட்ட வழி இல்லை...... செல்வனுடைய நெஞ்சு இரண்டாய்ப் பிளந்து விடுமோ என்று அஞ்சும் வகையில் அழுது தீர்த்தான். இரவுச் சாப்பாடும் அன்று இல்லை. தெருவிலிருந்து கிளம்பிய ஒவ்வோர் அணுகுண்டின் காதைப் பிளக்கும் ஓசையும் செல்வனுடைய இதயத்தைப் பிளந்து விட்டதைப் போல் செல்வன் குலுங்கிக் குலுங்கி அழுதான். செல்வனுடைய அழுகை ஓய்ந்து தூங்கும்போது இரவு நெடுநேரம் ஆகிவிட்டது.

தாயைப் பற்றி என்ன சொல்வது ? தாயைப் போல் இரக்கத்துக்கு ஆளானவளைக் கண்டு பிடிப்பது கஷ்டம். கட்டிய கணவனுடைய நிலையை அறியாமல், பெற்றோருடைய பொறுப்பைக் கழித்து விட்டதால், பேதை இன்று, வேலை செய்தும் கூலி பெற வழியின்றி, தன்னுடைய வாழ்க்கையை வாழ வழியின்றி, செல்வனுடைய தேவையைக்கூடத் திருப்தி செய்ய வகையின்றி, தவித்துக் கலங்கினாள். செல்லம்மாள் என்று செல்லப் பெயரிட்டுத்தான் வளர்த்திருந்தார்கள் பெற்றோர். ஆனால் இவ்வளவு சீரழியப்போகும் செல்வி என்று யார்தான் எண்ணி இருக்க முடியும்?

செல்லம்மாளுடைய வாழ்க்கை நிலையில்லாமல் சென்று கொண்டேயிருந்தது. கணவனும் வாழ்பவனுடைய குணத்தைப் போலவே நிலையும் இருந்தது. நான்கு வருஷங்கள் குடும்பம் என்ற பெயருக்குச் சற்றும் பொருத்தம் இல்லாமல் வாழ்க்கை நடத்தினாள். பின்னர் கணவனுடைய துணையைவிட எதிர்ப்பே சாதகமானது என்று கண்டு, தன்னுடைய செல்வனை அழைத்துக் கொண்டு தனியே சென்று வாழத் தொடங்கினாள்.....எத்தனை கொடிய பாவம் செய்திருந்தால் இவ்விதமாய் வாழ்க்கையே நரகமாய் வாழ வேண்டியிருக்கும் ? தன்னுடைய செல்வனுடைய விளையாட்டுக்கு வேண்டியதைக்கூடப் பெற முடியவில்லை என்று கூறினால், அந்த வாழ்க்கை நரகத்தை விடக் கொடியதேயாகும்....செல்லம்மாள் அன்று இரவு தூங்கவேயில்லை.

சரியாக நள்ளிரவு. எங்கேயோ ஒரு வெடி வெடிக்கும் ஓசை தொலைவில் கேட்டது. செல்வன் ராமு திடுக்குற்று விழித்தான். செல்லம்மாள், ''ராமு, தூங்கு'' என்று மேல் துணியைப் போர்த்தினாள்.

''அம்மா!'' என்று திரும்பினான் செல்வன்.

''என்னடா தங்கம் ?''

''நான் ஒண்ணு கேக்கறேன். நிசத்தைச் சொல்றியா ?''

''நிச்சயமா, நீ எது கேட்டாலும் நிசத்தையேதான் சொல்லுவேன். கேளுடா!''

''உன்னுடைய அம்மா எங்கே?''

''என்ன கேள்வி ! என்னுடைய அம்மா செத்துப் போயிட்டாள்.''

''செத்துப் போறதுன்னு என்ன அம்மா?''

''செத்துப் போறதுன்னு..... வந்து.... உனக்குச் சொன்னால் புரியாது.''

''சொன்னால் புரியும் அம்மா. என்ன கேட்டாலும் சொல்றேன்னு சொன்னியே?''

''செத்துப் போறதுன்னு கோவிலுக்குப் போகிறது – அதாவது கோவிலிலே, சுவாமி இல்லே, அந்தச் சுவாமிகிட்டப் போயிடறது.''

''தினம் சுந்தரத்தின் பாட்டி கோயிலுக்குப் போயிட்டு வராளே, அந்தப் பாட்டி தினமும் செத்துப் போறளா அம்மா?''

செல்லம்மாளுக்குத் திகைப்பு ஒரு புறம், நகைப்பு ஒரு புறம். செல்வனுக்கு எப்படித் திருப்தியான பதில் சொல்லுவது?

''செத்துப் போகிறவர்கள் திரும்பவும் வர மாட்டார்கள்.''

''ஏன், அம்மா?''

''சுவாமியிடம் போய்ச் சேர்ந்து விட்டால் அங்கேயிருந்து திரும்பி வரவே பிரியம் இருக்காது.''

''சுவாமி கோயிலில் இல்லையா அம்மா?''

''கோயிலில் இருப்பது நிஜ சுவாமி இல்லை. கல்லுச் சுவாமி. மேல் லோகத்தில் நிஜ சுவாமி இருக்கிறார். அங்கேதான் செத்துப் போகிறவர்கள் போகிறார்கள்.''




ஒவ்வொரு சாக்கலேட்டும் ... பாலின் குணங்கள் அடங்கியது!

இஷ்டம்போல் தேர்ந்தெடுக்க எண்ணற்ற
இன்பநயங்கள். காட்பரீஸ் சாக்கலேட்
சத்துச் செறிந்தது. சுவைமிக்கது
— ஊட்டமளிப்பதும்கூட.































Cadbury's

காட்பரீஸ் சாக்கலேட்
மிட்டாய் மட்டுமல்ல....ஒரு உணவும்கூட

LPE-Aiyars. C-3 TM

ஒருகணம் சிறுவன் சிந்தித்தான். ''அம்மா! நிஜ சுவாமி எப்படி யிருப்பார்? உன்னைப் போலவே இருப்பாரா அம்மா?''

செல்லம்மாளும் ஒரு கணம் சிந்திக்க வேண்டி யிருந்தது. தன்னுடைய செல்வனுடைய திருப்தியை எண்ணி ஒரு பொய்யைச் சொன்னாள்.

''நிஜ சுவாமி, என்னைப் போல் இருக்க மாட்டாருடா தங்கம். என்னுடைய ராமுத் தங்கத்தைப் போலவே இருப்பார்.''

''என்னைப் போலவா? நிஜமாகவா? அந்தச் சுவாமியை நான் இன்னிக்குப் பார்க்கணும் அம்மா. அவர் கிட்டப் போய் உன்னைப் பத்திச் சொல்லி உன்னை அடிக்கச் சொல்லப் போறேன்.''

''ஏண்டா, என்னை அடிக்கச் சொல்லப் போறே?''

''நீதான் எனக்கு அணுகுண்டு வாங்கித் தருவதாகச் சொல்லி ஏமாத்தி விட்டாயே? பொய்தானே சொன்னே, கட்டாயமா வாங்கித் தரேன்னு? நான் இப்பவே செத்துப் போய், சுவாமிகிட்டப் போனதும்,—மொதல்லே உன்னைப் பத்திக் கோள் சொல்லிக் கொடுத்து, உன்னை நாலு அடிக்கச் சொல்லப் போறேன். பாரு, சொல்றேனு இல்லையான்னு?''

''அப்படிச் சொல்லாதே அப்பா. நீ செத்துப் போனு நான் என்ன செய்வேன்!''

''நீயும் செத்துப் போய் என்கூடவே வரணும். அப்பத்தானே சுவாமி அடிக்க முடியும்? அம்மா, சுவாமின்னு உனக்குப் பயம்தானே?''

''சுவாமிகிட்டே நாம் எல்லாரும் பயப் படத்தான் வேணும். அவர்தானே நம் எல்லோரையும் வேண்டியதைக் கொடுத்துக் காப்பாத்தருரு.''

''நிசமாவா அம்மா?''

''ஆமாண்டா, தங்கம்.'' தாய் சற்றுப் பெருமூச்சு விட்டு, தன்னுடைய பொறுப்பைச் சுமந்த வேறு ஆள் பெற்றதில் திருப்தி அடைந்து, செல்வனைக் கையால் தலையில் வருடிச் சீராட்டினாள்.

''அப்படின்னு, இன்னிக்கு அணுகுண்டு வேணும்னு சுவாமியைக் கேட்டிருந்தால் நிச்சயமாக் குடுத்திருப்பாரு. இல்லையா?''

''கட்டாயமாக் குடுத்திருப்பார்.''

''உன்னைப் போய்க் கேட்டேனே, நான்! நான் முட்டாள். இல்லையா அம்மா?''

''நீ ரொம்பக் கெட்டிக்காரப் பையன் தான். நான்தான் முட்டாள். குழந்தைகளுக்கு அணுகுண்டு வாங்கி வரத் தெரியலே!'' என்றாள் அன்னை.

''வேண்டாம், அம்மா! நீ ஏன் கஷ்டப் படணும்? நான்தான் இப்போ சுவாமியைப் போய்ப் பார்த்து அணுகுண்டு, ஆனைவெடி, எனக்கு உனக்கு ரெண்டு பேருக்கும் சேர்த்து வாங்கி வரப் போறேனே? நீ நன்னுத் தூங்கு. நான் போய்ச் சுவாமியைப் பார்த்து, வேண்டிய அணுகுண்டு, சொக்காய், சாக்லேட்டு, வாங்கி வரேன். இன்னும் உனக்கு என்ன வேணும் அம்மா?''

''எனக்கு ஒன்றும் வேண்டாம்டா தங்கம். எனக்கு நீதான் வேணும். நீ இன்று மாதிரி எப்போதும் சமர்த்தா இருக்கணும்.''

''அம்மா, நீ தூங்கு. பொழுது விடியறதுக்குள்ளே நான் செத்துப் போய்ச் சுவாமியைப் பார்த்து எல்லாத்தையும் வாங்கிண்டு வந்துடறேன். சரிதானே அம்மா?''

செல்லம்மாளுடைய நிலையைப் போல் பரிதாபத்துக்கு இலக்கான நிலை வேறு இல்லை. செல்வனுடைய தீர்மானமான பேச்சைக் கேட்கக் கேட்க நெஞ்சு நறுக்குற்றுத் துடித்தது. ஆனால் இளங் குழந்தையை எப்படித் திருப்தி செய்வது?

செல்லம்மாள் கண் விழித்தபோது, பொழுது விடியும் நேரம் ஆகியிருந்தது. தெருவில் வெடிகளின் ஓசை காதைச் செவிடாக்கியது. தன்னுடைய செல்வன் விழிப்பதற்குள் செல்லம்மாள் தன்னுடைய செல்வனுக்காகத் தயார் செய்திருந்த திரட்டுப் பாலையும் கடையிலிருந்து வாங்கி வைத்திருந்த சுரும்பப் பொட்டலத்தையும் எடுத்துத் தனித் தனியாய் வைத்தாள். செல்வனுக்கு நீராட்டிவிட வெந்நீர் தயார் செய்துவைத்து விட எண்ணித் தவலையில் நீர் கொண்டு வந்து நிரப்ப வெளியில் குழாயடிக்குச் சென்றாள். திரும்பிவர ஒரு நாழிகையாகிவிட்டது. தெருவில் கூட்டம். பற்பல வெடிக்கும் தீப்பொறிகள். குழாயடியிலும் கூட்டம்.

திரும்பி வரும்போது செல்லம்மாளின் செல்வன் வேறு பக்கமாகப் புரண்டு படுத்திருந்தான். அவனை எழுப்ப வேண்டாமென்று எண்ணிய செல்லம்மாள் வெந்நீரைச் சுட வைத்தாள். செல்வனுக்காக ஒரு வேலை செய்யும் இல்லத்தில் பரிசாய் அளித்திருந்த நிஜாரையும், சொக்காயையும் எடுத்து வைத்தாள். முன்னிரவு தான் வாங்கி வந்திருந்த நல்லெண்ணெயைச் சுட வைத்தாள். பிறகு செல்வனிடம் வந்து கவனித்தாள். செல்வன் துயிலில் ஆழ்ந்திருந்தான். செல்வனுடைய துயிலைக் கலைக்க மனமின்றி வேறு செய்ய வேண்டிய வேலை ஏதேனும் இருக்கிறதா என்று அந்த ஓரறை வீடு முழுவதும் சுற்றிப் பார்வையை ஓட்டினாள்.



''கணவர் மனைவி நல்ல ஜோடியாக்கும்! அவளுக்கு இரும்புக் குண்டை எறிவதில் முதல் பரிசு. அவனுக்கு ஓட்டப் பந்தயத்தில் முதல் பரிசு.''



சமையல் அடுப்புக்கு மேலே என்ன? ஒரு நீண்ட சர்ப்பம் தலைகீழாகத் தொங்கியது.

செல்லம்மாள் உடனே "ஆ" வென்று தன்னை மறந்து வீரிட்டு அலறினாள். அவளுடைய அலறல் சத்தத்தைக் கேட்டுச் சர்ப்பம் எங்கோ ஓடி மறைந்தது. செல்லம்மாளுக்கு இப்போது சர்ப்பத்தைப் பற்றிக் கவலையில்லை. செல்வனைப் பற்றியே கவலை கொண்டு ஓடி, "ராமு! ராமு!" என்று தட்டி எழுப்பினாள். செல்வன் அசையவில்லை. உடலைத் தீண்டினாள்; சில்லென்றிருந்தது.

"அய்யய்யோ! நான் எண்ணியபடியே நடந்துவிட்டதே! சொன்னபடியே செய்து விட்டாயே! கடவுளே! நீ என்னைச் சோதிக்கவா இந்தக் குழந்தையாய் வந்து விளையாடினாய்? நான் என்ன செய்வேன்! ஐயோ! பாம்பு கடித்து மடியவா அந்த வருஷங்கள் கஷ்டத்தைப் பாராமல் உடம்பைத் தேய்த்து உயிரைக் கொன்று உன்னை வளர்த்தேன்! என்னையும் கொண்டு போக மாட்டாயா? தெய்வமே! உன் கண் குருடா?" என்று புலம்பிப் புலம்பிக் கண்ணீரைப் பெருமழையாய்க் கொட்டிப் பிதற்றினாள். அவளுடைய அலறலைக் கேட்டுச் சில அயல் அண்டையில் உள்ள ஜனங்கள் உள்ளே வந்து பார்த்ததும், செல்லம்மாளுடைய கூக்குரலுக்குக் காரணத்தை அறிய விரும்பினார்கள். ஒரு பெண் ஓடிவந்து செல்லம்மாளுடைய காதருகேவந்து, "என்ன செல்லம்மா ஏன் இப்படி அலறுகிறாய்?" என்று கேட்டாள்.

சற்று நிதானம் பெற்றுச் செல்லம்மாள் தன் செல்வன் படுத்திருக்கும் இடத்தை வெறித்துப் பார்த்து "குழந்தை!... பாம்பு! போயிட்டான்!...." என்று குழறினாள்.

கேள்வி கேட்ட பெண் ஓடிப்போய்ச் செல்வன் ராமுவைத் தூக்கினாள். என்ன ஆச்சரியம்! செல்வன் தலையைத் தூக்கிப் பார்த்து, "என்னம்மா?" என்றான்.

செல்வனுடைய குரலைக் கேட்ட செல்லம்மாள் திடுக்கிட்டு எழுந்து ஓடிப்போய், தன்னுடைய செல்வனைத் தூக்கி அணைத்துக் கொண்டு, "கண்ணே! ராமு! நீ பிழைத்து விட்டாயாடா தங்கம்!" என்று உற்சாகம் ததும்பக் கூறினாள். செல்வனும் தாயைக் கண்டதும், "அம்மா! நான் போய்ச் சுவாமியைப் பார்த்து எனக்கு நிறைய அனுகுண்டு வேணும்னு கேட்டேன் அம்மா. சுவாமி நிறைய வாங்கிக் கொடுத்திட்டார் அம்மா! அப்புறம் நிறைய லட்டு, பூந்தி எல்லாம் கொடுத்தார் அம்மா. நான் வயிறு நிறையச் சாப்பிட்டுட்டேன்! உனக்கு ரெண்டு புடவை கூடக் கொடுத்தார் அம்மா. நான் வாங்கிண்டு வரபோது, நீ ஓடி வந்து உடம்பைப் பிடித்துத் தூக்கினே. அப்படியே புடவை கீழே விழுந்துடுத்து அம்மா. உன்னுடைய கஷ்டம் எல்லாம் இன்னிக்கோட போயிடுத்தும்மா. சுவாமிதான் அப்படிச் சொன்னார்... எந்த விதமான கஷ்டமும் இனிமேல் உனக்கு இல்லையாம். நீ எனக்குச் சொன்னதுபோல் சுவாமி என்னைப் போலவேதான் இருந்தார் அம்மா. நான் இனி இந்த இடத்தில் இருக்க மாட்டேன். தினம் சுவாமியைப் போய்ப் பார்ப்பேன். என்ன அம்மா!" என்று மழலை மொழியில் கூறிக்கொண்டே யிருந்தான்.

செல்லம்மாளுக்குத் தன்னுடைய காதுகளை நம்ப முடியவில்லை. செல்வனுடைய சொற்களை எண்ணிப் பார்த்து, செல்வனுடைய சந்தோஷத்தையே விரும்பியதால், தன் துன்பத்தை மறந்து செல்வன் முகத்தில் முத்தமிட்ட வண்ணம் இருந்தாள்.

செல்லம்மாளுடைய அலறலைக் கேட்டு ஓடிவந்த அயல்வீட்டுப் பெண்கள் ஒன்றும் நடக்கவில்லையே என்ற ஓர் ஏமாற்றத்துடன் வீடு திரும்பினார்கள்.

செல்லம்மாளுடைய நிலையைப் போல் ஆனந்தமான நிலை வேறு எந்தத் தாயும் பெற்றிருக்க வழியில்லை. செல்வனுடைய கையில் இருந்த ஒரு சிறிய வெடியைப் பார்த்து, "இந்த வெடிதானு சுவாமி கொடுத்தது?" என்று கேட்டாள்.

"இல்லே, அம்மா! இந்த வெடியை நேற்று நான் தெருவில் கண்டெடுத்தேன். சுவாமி கொடுத்த அனு குண்டை எல்லாம் அங்கேயே வெடித்து விட்டேன்!"

இந்தப் பதிலைக் கேட்ட செல்லம்மாள், தான் எண்ணியபடியே செல்வன் கனவு கண்டு, அந்தக் கனவையே நிஜமாய் எண்ணி விட்டான் என்று அறிந்து திருப்தி அடைந்தாள். செல்வனே தான் சுவாமியைக் கண்டு வந்ததைப் பற்றியே ஓயாமல் பேசினான். அந்தச் செல்வனைப்போல் ஆனந்தம் பெற்றுள்ள செல்வனை எவருமே கண்டதில்லை.

# கப்பலோட்டும் அழகே கண்கொள்ளாக் காட்சி

## அரவிந்த்

தரத்திலுயர்ந்த துணிகள்
நாகரீகச் சிறப்புக்கு நல்வனப்பைத் தருகின்றன!

வகைபருக்களில் சில :

லான் பொரைஸ்டு பாப்லின்கள் :
ஷர்ட்டிங்குகள் : ஸ்ட்ரைப். டாபி,
செக், பைஜாமா.
வேட்டிகள்: மெர்ஸரைஸ்டு லான் : 5531
சூட்டிங்குகள் : கேபர்டின்.
பிரிண்டுகள் : பிரிண்டெட் லான்கள்,
வாயில்கள். பாப்லின்கள்.
செலவு செய்த கலர் புட்டாக்கள்.
கிரேக்களிலும் புட்டாக்களிலும்
2x2 ஃபேன்ஸி ஃபுல் வாயில்கள்.

SANFORIZED

டெபிலேஸ்டு* மற்றும் டெபிலேச்டு
இரட்டிப்புப் பரிசோதனை பெற்றது.

**அரவிந்த் மில்ஸ் லிமிடெட்**
அகமதாபாத்.




* Registered Users

# வட்ட மேஜை

*** வெள்ளித் திரைக்கு ஒரு வெற்றியும் தமிழ்ப் படங்களும்**

திரைப்பட உலகில் ஒரு மகத்தான சாதனையைப் புரிந்துள்ள திரு கே. எஸ். கோபாலகிருஷ்ணன் அவர்களைப் பாராட்டும் முறையில் அவருடைய உருவத்தையும், பழம் பெரும் நடிகர் திரு டி. எஸ். பாலையா அவர்கள் உருவத்தையும் முகப்பிலே வெளியிட்டுக் கௌரவித்திருப்பதும், 'வெள்ளித்திரையின் வெற்றி' என்னும் தலைப்பிலே 'என்னதான் முடிவு' படத்தை அழுத்தமாகப் போற்றியிருப்பதும் மிகவும் நல்ல காரியம். இந்த நல்ல காரியத்தைத் தக்க சமயத்தில் கல்கி செய்திருப்பது பாராட்டுக்குரியது.

நான் இந்தப் படத்தைப் பார்த்தபோது 'இந்த அருமையான படத்துக்கு விமரிசனம் எழுதத் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இல்லையே' என்று வருத்தப்பட்டேன். அந்தக் குறையைத் தாங்கள் நிவர்த்தி செய்துவிட்டீர்கள். கட்டுரை எழுதியுள்ள அன்பரை மனமாரப் பாராட்டுகிறேன்.

சென்னை — இ. க. ஷண்முகம்
11-10-65 (தலைவர் டி.கே.எஸ். நாடகசபை)

கல்கி 10 – 10 – 65 இதழில் வெளிவந்துள்ள 'வெள்ளித்திரைக்கு ஒரு வெற்றி' என்ற சிறப்புக் கட்டுரைக்கு என் இதய பூர்வமான பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். படத்தின் வெற்றிக்குச் சாட்சியாக விளங்கும் பல அம்சங்களைத் தெளிவாக எடுத்து விளக்கம் செய்திருப்பதே கட்டுரையின் மேன்மையை உயர்த்துகிறது.

மேற்படி கட்டுரையில் தவறுதல் காரணமாக ஏற்பட்டிருக்கும் ஒரு பிழையைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

படக் கதையின் மூலம் 'சுதேசமித்திர'னில் வெளியான ஸ்ரீ 'மஹரிஷி' அவர்களின் சிறு கதையல்ல ! ஸ்ரீ 'மஹரிஷி' அவர்களுடைய முழு நாவலான 'பனி மலை' என்ற புத்தகத்திலிருந்தே 'என்னதான் முடிவு' உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்தப் புத்தகம் மதுரை மீனாட்சி புத்தக நிலையத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது.

'மஹரிஷி' என்ற புனைபெயரில் ஏழெட்டு நாவல்களைப் புத்தகமாகவே பிரசுரித்திருக்கும் நண்பர் ஸ்ரீ டி. கே. பாலசுப்பிரமணியம் சேலத்தில் வசிக்கும் இளைஞர்.

சென்னை
7–10–65 — ஜடாதரன்

தரமுள்ள 'படம்' வேண்டுமெனக் கூக்குரலிடும் ரசிகப் பெருமக்கள் அது போன்ற படம் ஏதேனும் வெளியானால் ஏனோ அதை ஆதரிக்க மறுத்து விடுகின்றனர். தவறு ரசிகர்கள் மேல்தான்.

திரைப்படப் பிரதிநிதியாக அலுவல் புரியும் நான் இத்தமிழ் நாடு முழுவதும் சுற்றி வந்தபோது நேரில் கண்ட உண்மை. கதையும், கருத்துக்களும் இழையோடும் படங்களைக் காட்டிலும், இரண்டு பேட் பாட்டு, நாலு டப்பாங்குத்து ஆட்டம், மேல்நாட்டு நடனங்கள், கவர்ச்சியைக் காட்டும் பெண்களின் நடிப்பு இவற்றுக்குத்தான் நாட்டில் வரவேற்புள்ளது. வசூலும் ஆகிறது. இந்தத் தலைவிதியை மாற்றுவதோடு, இந்த வியாதியின் உற்பத்தி ஸ்தலத்தையும் ஆராய்ந்து தீர்க்க வேண்டும்.

இத்தகைய களையெடுப்பு நடைபெற்றால் ரசிகர்களின் மனமும் மாறினால் நமது தமிழ் நாட்டுப் படாதிபதிகள் அத்தனை பேரும் சத்யஜித்ரே, கோபாலகிருஷ்ணன்கள்தான்.

திருச்சிராப்பள்ளி — ஆர்.எஸ்.பிரகாசம்
7–10–65 (திரைப்படப் பிரதிநிதி ஏவி.எம்)

தமிழ்ப்படத்தின் தரம் குறைந்திருக்கிறது என்பது போல் தாங்கள் எழுதியிருப்பதை என்னால் ஒப்புக் கொள்ள முடியாது.

'எங்க வீட்டுப்பிள்ளை' வெற்றியை யாரால் மறுக்க முடியும்? 'உன்னைப் போல் ஒருவன்' படம் அகில இந்திய பரிசுப் பத்திரம் பெறவில்லையா? 'வெண்ணிற ஆடை' புதுமைப் படம் வெற்றிபெறவில்லையா? 'சாந்தி'க்கு என்ன குறைச்சல்? 'பஞ்சவர்ணக் கிளி'யை யாரால் மறுக்க முடியும்? 'காக்கும் கரங்கள்' மாபெரும் வெற்றி பெற்றதே ! 'திருவிளையாடல்' தமிழுக்கும் தொண்டு செய்து கொண்டு என்ன போடுபோட்டுக் கொண்டிருக்கிறது ?

திருவனந்தபுரம்
13–10–65 — எஸ்.எஸ். மணி

திரு கே. எஸ். கோபாலகிருஷ்ணன் செய்யாத காரியங்கள் என்ற பட்டியலில், 'திரைக் கதைக்குச் சம்பந்தமில்லாத, பொருத்தமற்ற, தேவையற்ற, அபத்தமான தமாஷ்ப் பகுதிகளை வேண்டுமென்றே எடுத்து ஒட்ட வைக்கவில்லை' என்பதைக் குறிப்பிட மறந்து விட்டீர்களே !

சென்னை
13–10–65 — விஜி

என்னிடம் ஒரு பத்திரிகை இருந்திருக்குமானால் உங்களை முந்திக் கொண்டிருப்பேன், கோபாலகிருஷ்ணனின் திறமையைப் பாராட்டுவதற்கு.

சைதை
9–10–65 — தமிழ்த் தம்பி

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

## உங்கள் குழந்தை பள்ளிக்கூடம் போகத் தயார் ஆனால் நீங்கள் அவனை அனுப்பத் தயாரா?

வயது : 5

ஆரோக்கியம் : மிக நன்றாகவுள்ளது

புத்தி கூர்மை : சகஜமாக இருக்கிறது

அப்படியிருந்தும் அவனை ஏன் பள்ளிக்கூடத்தில் சேர்க்கவில்லை? செலவுக்குப் பணமில்லையா?

நீங்கள் சேமிக்கத் துவங்க எப்போதும் தாமதமாகாது. பையனும் நல்ல பள்ளிக்குச் சேரலாம். ஆண்டு அதிகரிக்கும் போதே உங்கள் குழந்தை வளர வளர, செலவும் அதிகரிக்கும்.

இது உங்களுக்கு நியாயமாகப் படவில்லையா?

கணக்கு ஆரம்பிக்கவும் பெரிய தொகை ஏதும் தேவையில்லை. ஐந்தே ரூபாய்கள் இருந்தால் எம்மிடம் ஒரு சேவிங்ஸ் பாங்க் கணக்கு ஆரம்பித்து விடலாம்.

பிற்பாடு நீங்கள் அவ்வப்பொழுது போடும் தொகைகள் சொற்பமாக இருப்பினும் கவலை வேண்டாம். தொகை சிறியதோ, பெரியதோ, எம்மிடம் கணக்குவைத்திருக்கும் எல்லோருக்கும் ஒரேவித மரியாதை, திறமையான சேவை வழங்குகிறோம்.

உங்கள் சேமிப்புடன் கூடவே ஆண்டு தோறும் 4% வட்டியும் சேருகின்றது.

மறவாதீர்கள், சேமிக்கத் துவங்க இதுவே தருணம்.

**ஞாபகமிருக்கட்டும், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ்தான் உங்கள் குடும்ப பாங்க் !**



## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

அஸோஸியேடட் பாங்குகள் : லாயிட்ஸ் பாங்க் லிமிடெட். நேஷனல் புரொவின்ஷியல் பாங்க் லிமிடெட்

**கிளைகள் : சென்னை :** 3, நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; **தூத்துக்குடி :** 44, பீச் ரோடு; **ஹைதராபாத் :** அபித் ரோட்

STERED No. M. 4392
stered as a Newspaper in Ceylon